॥ ஸ்ரீஹரி: ॥ 423

# கர்ம–ரஹஸ்யம்

## कर्म-रहस्य (तमिल)

---

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ ப$_3$ந்து$_4$ப்ச ஸக$_2$ா த்வமேவ ।
த்வமேவ வித்$_3$யா த்$_3$ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தே$_3$வதே$_3$வ ॥

ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,
உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,
கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,
அனைத்தும் ஆன என்றன் ஆதிதேவனும் நீயே!

---


ஆக்கியோர்

**சுவாமி ராம்ஸுகதாஸ்**

*Books are also available at—*

1. Gita Press Sales Depot
   Gita Press Mansion, 8/1M, Racecourse
   COIMBATORE — 641018
   © 0422-3202521
2. Gita Press Gorakhpur Book Shop
   Electro House N0. 23
   Ramanathan Street, Kilpouk
   CHENNAI — 600010
   © (044) 26615959; Fax 26615909
3. 12, Abhirami Mall, Purasavalkam, Near Kilpouk/Veperi, CHENNAI

தமிழாக்கம்: T. சேஷாத்ரி, M.A.,

Fourteenth Reprint 2016 2,000

Total 64,000

❖ **Price : ₹ 10**

**( Ten Rupees only )**

Printed & Published by **:**

**Gita Press, Gorakhpur—273005 (INDIA)**

(a unit of Gobind Bhavan-Karyalaya, Kolkata)

Phone - (0551) 2334721, 2331250 ; Fax - (0551) 2336997

web : **gitapress.org** e-mail : **booksales@gitapress.org**

**Visit gitapressbookshop.in for online purchase of Gitapress publications.**

|| ஸ்ரீஹரி: ||

# பதிப்பாளர் உரை

தற்போது 'கர்மம்' மற்றும் 'அதன் ரஹஸ்யம்' பற்றிய பல பிரமைகளும், தவறான குழப்பங்களும் மக்களிடையே பரவியிருக்கின்றன. எனவே, இன்றைய காலகட்டத்தில் அவற்றைப் பற்றிய உண்மைகளைப் புரிந்து கொள்ள வேண்டிய தேவை மிக இருக்கிறது. நமது பெருமதிப்பிற்குரிய **சுவாமி ராம்ஸுகதாஸ் மகராஜ்** அவர்கள் ஸ்ரீமத் பகவத்கீதையின் 'ஸாதக ஸஞ்ஜீவனீ' என்ற ஹிந்தி உரையில், 'கர்மம்', 'வர்ணதர்மம்' ஆகிய இரு பொருள்களைப் பற்றி, மிக எளிதாக, படிப்போருக்குப் புரியும்வண்ணம் ஆய்ந்து விளக்கி இருக்கிறார்.

அக்கருத்தைத்தான் நாங்கள் இச்சிறு நூலின் வாயிலாக எடுத்துரைத்துள்ளோம். கர்மம், வர்ணதர்மம் பற்றிய அநேக சந்தேகங்கள் நீங்கித் தெளிவு பெற, இந்நூல் உறுதுணையாக இருக்குமென நம்புகிறோம்.

[தமிழில் 'ஸாதக ஸஞ்ஜீவனீ' (மூலம்–தமிழ் மூலம்–பதவுரை–விரிவுரை) என்ற நூல், எங்களால் இரண்டு பாகங்களாக வெளியிடப்பட்டுள்ளது.]

— **பதிப்பாளர்கள்**



॥ ஸ்ரீஹரி: ॥

# தேவநாகரி எழுத்துக்கள் — சில குறிப்புகள்

ஒரு மொழியின் சொல்லை இன்னொரு மொழியின் எழுத்துக்களால் எழுதுவதை எழுத்துப்பெயர்ப்பு **(Transliteration)** என்று அழைக்கிறோம். ஒரு மொழியிலுள்ள சொல்லின் பொருளை மற்றொரு மொழியில் கூறுவதை மொழிபெயர்ப்பு **(Translation)** என்று அழைக்கிறோம்.

சம்ஸ்கிருதச் சொற்களைப் பிழையின்றி உச்சரிக்க, முறையாக சம்ஸ்கிருதம் கற்றவர்களிடமிருந்து அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டும்.

ஆங்கில எழுத்துக்களின் துணைகொண்டு 2, 3, 4 என்னும் குறியீடுகளுடன் சம்ஸ்கிருத எழுத்துக்களுக்கு நிகரான தமிழ் ஒலி வடிவங்கள் இங்கு தரப்பட்டுள்ளன.

| | | | | |
|---|---|---|---|---|
| अ அ | आ ஆ | इ இ | ई ஈ | उ உ |
| ऊ ஊ | ऋ ரி | ॠ ரீ | ॡ ல்ரு | ए ஏ |
| ऐ ஐ | ओ ஓ | औ ஔ | | |

| | | | | |
|---|---|---|---|---|
| क க [ka] | ख க$_2$ [kka] | ग க$_3$ [ga] | घ க$_4$ [gha] | ङ ங |
| च ச [ca] | छ ச$_2$ [cha] | ज ஜ [ja] | झ ஜ [jha] | ञ ஞ |
| ट ட [ta] | ठ ட$_2$ [tta] | ड ட$_3$ [da] | ढ ட$_4$ [dda] | ण ண |
| त த [tha] | थ த$_2$ [thha] | द த$_3$ [dha] | ध த$_4$ [dhha] | न ந,ன |
| प ப [pa] | फ ப$_2$ [pha] | ब ப$_3$ [ba] | भ ப$_4$ [bha] | म ம |
| य ய | र ர | ल ல | व வ | |
| स ஸ [sa] | ष ஷ [sha] | क्ष க்ஷ [ksha] | ह ஹ [ha] | |
| श ஶ [śā] | ज्ञ க்ஞ [gna] | ऋ ரு [ri] | | |

**‘श’** என்ற எழுத்து **‘ஶ’** என்று எழுத்துப்பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது. இந்த **‘ஶ’** என்னும் எழுத்து **‘பிசகு’**, **‘கசடு’** என்னும் சொற்களில் வரும் **‘ச’**வைப் போன்று ஒலிக்கும்.

சம்ஸ்கிருத–தமிழ் எழுத்துப்பெயர்ப்பில் **(Transliteration)** கொடுத்துள்ள எழுத்துக்கள் எழுத்துப்பெயர்ப்பில் மட்டும்

பயன்படுத்தப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்பில், வழக்கத்தில் உள்ள தமிழ் எழுத்துக்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. உதாரணமாக **'सुखं'** என்ற சொல் எழுத்துப்பெயர்ப்பில் **'ஸுக$_2$ம்'** என்றும், மொழிபெயர்ப்பில் **'சுகம்'** என்றும் எழுதப்பட்டுள்ளது.

சம்ஸ்கிருதத்தில் உள்ள உயிரெழுத்தான **'ऋ'** என்பது உயிரெழுத்தாக வரும்பொழுது **'ரி'** என்றும், உயிர்மெய்யெழுத்தாக வரும்பொழுது **'ரு'** என்றும் உச்சரிக்கப்படுகிறது. (உ–ம்.:– **ऋषि – ரிஷி, कृत्वा – க்ருத்வா)** இந்த **'ரு'** என்னும் எழுத்து **'எருது'**, **'விருது'** என்னும் சொற்களில் வரும் **'ரு'**வைப் போன்று ஒலிக்கும்.

**'ञ'** என்ற எழுத்து **'ஞ'** என்றும், **'ज्ञ'** என்ற கூட்டெழுத்து **'க்ஞ'** என்றும் எழுத்துப்பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன. **'ञ'** என்ற எழுத்தில் துவங்கும் சொற்களில்லை.

ஒரு சொல்லிற்கு மேல் இருக்கின்ற புள்ளியானது **'ம்'** என்னும் எழுத்தைக் குறிக்கிறது. (உ–ம்.:– **सुखं – ஸுகம்**)

ஒரு சொல்லின் இறுதியில் மேலும் கீழும் வருகின்ற இரு புள்ளிகள் (:) **'விஸர்கம்'** என்று அழைக்கப்படுகிறது. இதன் உச்சரிப்பு, இதற்கு முன் வரும் எழுத்தைப் பொறுத்து அமையும். உதாரணம் பின்வருமாறு :–

**भवन्तः** – ப$_4$வந்த: – ப$_4$வந்த**ஹ**
**स्थितिः** – ஸ்தி$_2$தி: – ஸ்தி$_2$தி**ஹி**
**प्रभुः** – ப்ரபு$_4$: – ப்ரபு$_4$**ஹு**
**गुणैः** – கு$_3$ணை: – கு$_3$ணை**ஹி**
**भ्रुवोः** – ப்$_4$ருவோ: – ப்$_4$ருவோ**ஹோ**

சம்ஸ்கிருதச் சுலோகங்களில் சில இடங்களில் **'ऽ'** அல்லது **'ऽऽ'** என்னும் குறியீடுகளைக் காணலாம். இதற்கு **'அவக்$_3$ரஹம்'** என்று பெயர். இந்த இடங்களில் முறையே **'அ'**, **'ஆ'** என்னும் எழுத்துக்கள் தொக்கி நிற்கின்றன என்று பொருள் கொள்க.



॥ ஓம் ஸ்ரீபரமாத்மநே நம: ॥



|| ஸ்ரீஹரி: ||

# கர்ம-ரஹஸ்யம்

இந்நூலின் தலைப்பில் 'கர்மம்' என்று எழுதியிருக்கிறோம். இது வடமொழியில் எழுதுகின்ற முறை. தமிழில் 'கருமம்' என எழுதவேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். ஆனால், கலைச்சொற்களைப் பயன்படுத்த நேரும்போது, அதுவும் சமயக்கருத்துக்களை எழுதும்போது மூலமொழியில் உள்ள சொற்களையே, அங்கே எழுதப்படும் விதத்திலேயே பயன்படுத்துவது கருத்துக்கு ஒரு தெளிவைத் தரும் என்று கருதுகிறோம். ஒரே மொழியிலுள்ள சொற்களாயிருந்தாலும்கூட, சொற்களுக்குப் பொருள் கொள்ளும்பொழுது, சில சமயங்களில் தெளிவான கட்டுப்பட்ட பொருள்களாய் இல்லாமல் சற்று மாறுபட்ட கருத்துக்களையும் கொள்ள இடம் கொடுக்கின்றன. எனவே, நாம் பயன்படுத்தும் சொல்லை வரையறுத்த முறையில் பொருள் கொள்ள ஏதுவாக, சொல்லின் அமைப்பைக் கூறிப் பொருளையும் உறுதிபடக் கூறிவிட வேண்டும். இந்நிலையில், இந்நூலின் மொழிபெயர்ப்பில் வடமொழிச் சொற்களையே அடிப்படைச் சொற்களாகப் பயன்படுத்தியுள்ளோம். முதலில் தேவையான இடங்களில் தமிழ் மொழிபெயர்ப்பையோ அல்லது தமிழில் வழக்கில் உள்ள சொற்களையோ எடுத்துக்காட்டுவோம்.

*மற்றொரு கருத்து:* நாம் மொழிபெயர்ப்பு என்று சாதாரணமாகச் சொல்லும் பொழுது அதன் நீளம், அகலம், ஆழம், உயரம் முழுவதையும் மனத்தில் கருதி, உறுதியாக எதைச் செய்கிறோம்? என்று கூற முடிவதில்லை. மொழிபெயர்ப்பு என்ற கருத்தில் வெறும் சொல்லுக்குச் சொல்லாகவோ, வாக்கியத்திற்கு வாக்கியமாகவோ மாற்றம் செய்யப்படுவது மட்டும் போதாது. உண்மையில் அது மொழி மாற்றமாக இல்லாமல், பொருள் பெயர்ப்பாக இருந்தால்தான் படிப்பொருக்குத்

தெளிவுபடும். அதனால்தான் மொழிபெயர்ப்பைச் சிறந்த அறிஞர்கள் வரவேற்பதில்லை. இருப்பினும், வேறு வழியின்றி மொழிபெயர்ப்புகளைச் செய்து கொண்டிருக்கிறோம். இந்த மொழிபெயர்ப்பில் நாம் கூடிய வரை கருத்துப் பெயர்ப்பாகவே செய்திருக்கிறோம்.

இப்பொழுது நாம் பொதுவாக 'கர்மம், கர்மம்' என்று பேசுகிறோமே, தமிழில் 'வினை' என்று சொல்கிறோமே, இதன் உண்மையான பொருளையும், அது எந்த வரையறைக்கு உட்பட்டது என்பதையும் தெரிந்துகொள்ள முயல்கிறோம். 'ரஹஸ்யம்' என்ற சொல் தமிழிற்குப் புதிதல்ல. ஆனால், அதை 'இரகசியம்' என்று எழுத வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். நாம் ஏற்கனவே கூறியபடி வடமொழி அமைப்பை ஒட்டியே எழுதுகிறோம். 'ரஹஸ்யம்' என்றால் மறைந்திருக்கும் உண்மை, நாடிக் கண்டு கொள்ள வேண்டிய உண்மை என்று பொருள். மேலெழுந்தவாரியாக, நாம் பொருள் கொள்வது போதாது. தமிழிலேகூட செயல் என்றும், வினை என்றும் இரண்டு சொற்கள் உண்டு. சில இடங்களில் இரண்டிற்கும் பொருள்மயக்கம் ஏற்பட்டாலும்கூட, வினை வேறு, செயல் வேறு. ஒரு வகையில் செயல்களின் பதிவே அல்லது செயல் தொகுதிகளின் பதிவே வினையாகும். இந்த மாறுபாட்டை வடமொழியில் கர்மம், கிரியை என்ற இரண்டு சொற்களின் மூலம் தெளிவுப்படுத்துகிறோம். இந்த 'கிரியை' என்ற சொல்லுக்கும் இரண்டு பொருள்கள் உண்டு.

மேலே போகப் போக இவ்வளவு விவரங்களைக் கூறிக் கொண்டிருக்க முடியாது. எனவே, எந்தச் சொல்லைப் படித்தாலும் அந்தச் சொல்லுக்கு, அதாவது கலைச்சொல்லுக்கு இந்த நூலில் கொடுக்கப்பட்டிருக்கின்ற பொருளைத் தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள். அப்போதுதான் இந்தக் கருத்துக்களின் நுண்மை புலனாகும். சமயக்கருத்து, அறிவு நிலையில் நின்றுவிடாமல் உணர்வு மயமாக மாற வேண்டும். அதனால், இந்த முன்னுரை தேவையாயிற்று.

## இனி இந்நூலின் விஷயத்திற்கு வருவோம்.

'புருஷன்', 'பிரகிருதி' (ப்ரக்ருதி) என்று இரண்டு உண்டு. இவைகளில் புருஷனிடத்தில் ஒரு மாறுபாடும் ஏற்படாது. ஆனால், இதற்கு நேர்மாறாக பிரகிருதியானது மாற்றம் இல்லாமல் ஒருபொழுதும் இருக்க முடியாது. எப்பொழுது இந்த புருஷன், பிரகிருதியிடம் நெருங்கிய உறவை ஏற்படுத்திக் கொள்கிறானோ, அப்பொழுது பிரகிருதியினுடைய செயல் – பிரகிருதியினுடைய கிரியை – புருஷனுடைய 'கர்மம்' ஆகிறது. ஏனெனில், பிரகிருதியோடு புருஷன் உறவு ஏற்படுத்திக் கொண்டவுடன், அவர்களிடையே 'தாதாத்மியம்' ஏற்பட்டுவிடுகிறது. அதாவது, இரண்டும் தனித்தன்மையை விட்டு ஒன்றாக இருக்கும் நிலை அடைகின்றன. 'தாதாத்மியம்' ஏற்பட்டுவிடுவதனால், இயற்கையில் கிடைக்கும் பொருட்களுடன் ஒரு 'மமதை' ஏற்படுகிறது. இந்த 'மமதை' என்ற சொல்லுக்கு ஆசை அல்லது பற்று என்று பொருள். அந்த மமதையின் காரணமாகக் கிடைக்காத பொருட்களின் மீது ஓர் ஆவல் ஏற்படுகிறது. இந்த ஆவலை 'காமனா' என்கிறோம். இந்தவிதமாக காமனா (ஆவல்), மமதை, தாதாத்மியம் – இம்மூன்றும் சேர்ந்திருக்கும்பொழுது, எந்தெந்த மாற்றம் பெறுகிற கிரியைகள் அல்லது செயல்கள் நடக்கின்றனவோ, அவைகளின் பெயர் 'கர்மம்' ஆகும்.

தாதாத்மியம் விட்டுப் போனால், இந்தக் கர்மம் புருஷனுக்கு 'அகர்மம்' ஆகிறது. அதாவது, அந்தக் கர்மம் (புருஷன் சம்பந்தம் இல்லாத காரணத்தால்) கேவலம் கிரியையாகவே நின்றுவிடுகிறது. அதில் பயனைக் கொடுக்கக் கூடிய ஆற்றல் இருக்காது. அகர்ம நிலையில் அதாவது 'ஸ்வரூபத்தின்' அனுபவமாகவே மாறி நிற்கும்போது, அந்த மகாபுருஷனுடைய உடலின் மூலமாக செய்யப்படும் செயல்கள் அனைத்தும் 'அகர்மத்தின் கர்மம்' என்று கூறப்படுகின்றன.

***கர்மண்யகர்ம ய: பச்யேத் அகர்மணி ச கர்ம ய: ।***
***ஸ பு$_3$த்$_3$தி$_4$மாந்மநுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத் ॥***

***(ஸ்ரீமத் பகவத்கீதை 4/18)***

இதை விளக்கமாகக் கூறப் போனால், பற்றற்ற ஸ்வரூப நிலை அனுபவம் இல்லாதபோதும்கூட, உண்மையில் எல்லாக் கிரியைகளுமே பிரகிருதி. அது அதன் காரிய சரீரத்தாலேயே செய்யப்படுகிறது. ஆனால், பிரகிருதி அல்லது உடலில் இருந்து, தன் தனித்தன்மையை உணராதபோது, அந்தக் கிரியைகள் கர்மங்கள் ஆகின்றன.

*ப்ரக்ருதே: க்ரியமாணாநி கு$_3$ணை: கர்மாணி ஸர்வஶ: |*
*அஹங்காரவிமூட$_4$ாத்மா கர்தாஹமிதி மந்யதே ||*

*(ஸ்ரீமத் பகவத்கீதை 3/27)*

''எல்லாக் கர்மங்களும் எல்லாவிதத்திலும் பிரகிருதியின் குணங்களின் மூலம் செய்யப்படுகின்றன. (ஆனால்,) அஹங்காரத்தால் மதிமயங்கிய அந்தக்கரணத்தை உடைய அஞ்ஞானி 'நான் கர்மத்திற்குக் கர்த்தா' என்று கருதுகிறான்.''

*ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணாநி ஸர்வஶ: |*
*ய: பஶ்யதி தத$_2$ாத்மாநம் அகர்தாரம் ஸ பஶ்யதி ||*

*(ஸ்ரீமத் பகவத்கீதை 13/29)*

''எவன், எல்லாக் கர்மங்களையும் எல்லா வகையிலும் பிரகிருதியின் மூலமே நடைபெறுவதாகக் காண்கிறானோ, மேலும் தன்னைச் செயலற்றவனாகவும் காண்கிறானோ (அனுபவத்தில் உணர்கிறானோ) அவனே (உண்மையில் காண்பவனாகிறான்).''

***கர்மம் மூன்று வகைப்படும்:–*** 1. கிரியமாண கர்மம் (நிகழும் நிலையிலுள்ள கர்மம்), 2. ஸஞ்சித கர்மம், 3. பிராரப்த கர்மம். இப்பொழுது நிகழ்காலத்தில் செய்யப் பட்டுக் கொண்டிருக்கின்ற கர்மங்களைக் ***'கிரியமாண கர்மம்'*** அல்லது ***'நிகழ்நிலை கர்மம்'*** என்று கூறுகிறோம்.

கீதை அத். 4/12 மற்றும் 15/2வது சுலோகங்களின் பொருள்:– ''புதிய செயல்கள், அவற்றின் பயனாக ஏற்படும் ஸம்ஸ்காரங்கள் எல்லாமே மனிதப் பிறவிகளிலேயே ஏற்படுகின்றன; பறவை மற்றும் மிருக ஜாதியில் ஏற்படா. ஏனெனில், அவை வினைப்பயனைத் துய்ப்பதற்காகவே ஏற்பட்ட யோனிகள் (பிறவிகள்).

இந்தப் பிறவியிலோ, இப்பொழுதுக்கு முன்போ அல்லது சென்ற அநேகம் மனிதப் பிறவிகளிலோ செய்யப்பட்ட கர்மங்கள் சேர்ந்து இருக்கும் தொகுதியை **'ஸஞ்சித கர்மம்'** என்று கூறுகிறோம். இந்த ஸஞ்சித கர்மத்தில் பயனைக் கொடுக்கும் முளைப்பு நிலையில் உள்ளவற்றை **'பிராரப்த கர்மம்'** என்று கூறுகிறோம். இவை பிறவி, வயது, அனுகூல–பிரதிகூலமான சூழ்நிலைகளின் உருவத்தில் பயனாக மாறுவதற்கு ஏற்ற நிலையில் இருக்கும்.

## 1. கிரியமாண (நிகழ் நிலை) கர்மம்




நிகழ்நிலை கர்மங்கள் (கர்மாக்கள்) இரண்டு வகைப்படும். அவை சுபமான அல்லது அசுபமானவை. சாஸ்திர நூல்களில் விதித்தபடி, விதித்த முறைகளைக் கொண்டு செய்யப்படுகின்ற கர்மங்கள் சுபகர்மங்கள் என்று சொல்லப்படுகின்றன. ஆனால், காமம் (ஆசை), குரோதம் (கோபம்), லோபம் (பேராசை), ஆஸக்தி (குருட்டுப்பற்று) முதலியவைகளால் தூண்டப்பட்டு, சாஸ்திரம் 'கூடாது' என்று சொல்கின்ற செயல்கள் செய்யப்படும்பொழுது, அவை அசுபகர்மங்கள் என்று கூறப்படுகின்றன.

சுபமோ, அசுபமோ நிகழ்நிலை கர்மத்திற்கு இரண்டு வகை விளைவுகள் உண்டு. ஒன்று பயன் பகுதி. மற்றொன்று ஸம்ஸ்காரப் பகுதியின்பால் படும். ஸம்ஸ்காரம் என்றால் மீண்டும் மீண்டும் ஒரு செயலைச் செய்வதனால் அல்லது ஒரு வகையான (சுப அல்லது அசுப) செயலைச் செய்வதனால் மனத்தில் ஏற்படுகிற செயல் 'போக்குப் பதிவாகும்'. இவ்விரண்டும் தனித்தனியானவை, மாறுபட்டவை.

நிகழ்நிலை கர்ம பயன்களின் அம்சத்தில் இரண்டு பேதங்கள் உண்டு. ஒன்று திருஷ்டமாகும்; அதாவது, தோற்றம் தருவதாகும். மற்றொன்று அதிருஷ்டம்; அதாவது, தோற்றத்திற்குள் வராதது. இவற்றில் திருஷ்டத்திலும் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று தற்காலிகமானது; அதாவது, உடன் நிகழ்வது. மற்றொன்று காலாந்தரிகம்; அதாவது, பின்னால் கால இடைவெளிக்குப் பிறகு ஏற்படுவது. இதை விளக்கப் பின்வரும் எடுத்துக்காட்டைப் பார்ப்போம். உணவு உண்ணும் பொழுது ஏற்படுகின்ற சுவை அல்லது இன்ப உணர்வு உடன் கிடைக்கும் பயனாகும். ஆனால், அவ்வுணவின் பயனாக வயது, ஆற்றல், உடல்நலம் முதலியவை அதிகரிக்கின்றனவே, அது திருஷ்டத்தின் பின்விளைவு ஆகும். அதாவது, காலாந்தரத்தில் ஏற்படுவது. இவ்விதமே காரம் அதிகமாக சாப்பிடுகின்ற சுபாவம் உள்ளவன் அதிக காரமுள்ள பண்டங்களைச் சாப்பிட்டுத் திருப்தி அடைகிறான், இன்பமுறுகிறான். அப்போது காரத்தின் காரணமாக நாக்கில் எரிச்சல், கண்களிலிருந்தும் மூக்கிலிருந்தும் நீர்வடிதல், தலையில் வேர்வை – இவையெல்லாம் தோற்றம் தரும் தற்காலிகமாகப் பயனாகும். தவறான உணவு முறையின் விளைவாக வயிற்றில் எரிச்சல், வலி, வியாதி ஏற்படுகின்றன. அவை திருஷ்டத்தின் காலாந்தரப் பயனாகும்.

இந்தவிதமாகவே அதிருஷ்டத்திலும் இரண்டு பேதங்கள் உண்டு. அவை லௌகிகம், பாரலௌகிகம். வாழும் பொழுதே நற்பயனை வேண்டி வேள்வி, தானம், தவம், தீர்த்தயாத்திரை, விரதம், மந்திரஜபம் ஆகிய சுபகர்மாக்களைச் சாஸ்திர

முறைப்படிச் செய்தோமானால், இதற்கு பிரதிபந்தகமான (இடையூறு விளைவிக்கக் கூடிய) நிகழ்ச்சிகள் ஒன்றும் இல்லாது போனால், இங்கேயே புத்திரன், தனம், கீர்த்தி, பெருமை ஆகிய அனுகூலங்கள் கிடைக்கும். மேலும் வியாதி, வறுமை முதலிய பிரதிகூலங்கள் நிவர்த்தியாகும். இது அதிருஷ்டத்தின் லௌகிக பலனாகும்.

இங்கே திருஷ்டத்தின் காலாந்தரப் பயனும், அதிருஷ்டத்தின் லௌகிகப் பயனும் ஒரே மாதிரி இருப்பதாகத் தோன்றுகின்றன. ஆனால், அவை வேறு வேறு. காலாந்தர பலன் நேரே அதாவது உடனே கிடைக்கிறது. பிராரப்தமாகிக் கிடைப்பதில்லை. ஆனால், அதிருஷ்ட லௌகிகப் பயன் பிராரப்தமாகியே கிடைக்கிறது.

இறந்த பிறகு சுவர்க்கம் கிடைக்க வேண்டும் என்று விரும்பி, விதிமுறைப்படி ஈடுபாடு, நம்பிக்கை கொண்டு வேள்வி, தானம், தவம் முதலிய நற்கர்மாக்கள் செய்யப் பட்டால், இறந்த பிறகு சுவர்க்கம் முதலிய மேல் உலகங்கள் பெறலாம். இது அதிருஷ்டத்தின் பாரலௌகிக (மேலுலக)ப் பயனாகும். இவ்விதமே திருடுதல், கொள்ளை, கொலை புரிதல் முதலிய தீயசெயல்களுக்கு லௌகிகப் பயனாக சிறை, அபராதம், தூக்குத்தண்டனை முதலியன கிடைக்கும். இது அதிருஷ்டத்தின் லௌகிகப் பயனாகும். பாவங்களின் பயனாக, இறந்த பிறகு நரகவாசம் அல்லது பறவை, மிருகங்கள், புழு–பூச்சிகளாகப் பிறவி எடுத்தல் – இவையெல்லாம் அதிருஷ்டத்தின் பாரலௌகிகப் பயன்கள்.

பாவம், புண்ணியம் என்ற இவற்றின் லௌகிக, பாரலௌகிகப் பயன்களின் விஷயத்தில் ஒரு கருத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். எந்த பாவ கர்மங்களின் பயனாக கைது, அபராதம், பழி முதலியவற்றின் உருவத்தில் தண்டனை அனுபவிக்கப்படுகிறதோ, அவற்றிற்கு இறந்த பிறகும் பயன் அனுபவிக்க வேண்டிய நிலை ஏற்படாது என்றாலும், மனிதன் செய்த பாவத்தின் அளவு எவ்வளவு? அதன் பயனை

முழுவதுமாக அனுபவித்துவிட்டானா? அல்லது ஒரு பகுதிதான் அனுபவித்தானா? அனுபவித்த பகுதி எவ்வளவு? மிச்சம் எவ்வளவு? என்றெல்லாம் தெரிந்து கொள்வதற்கு மனிதனிடம் அளவுகோலோ, திறமையோ கிடையாது. ஆனால், பகவானுக்கு முழுமையாக எல்லாம் தெரியும். எனவே, அவர் இட்ட கட்டளையின்படி பாவங்களின் எந்த அம்சம் அனுபவிக்கப் படவில்லையோ, அதை இந்தப் பிறவியிலோ அல்லது இறந்த பிறகோ அனுபவித்தே ஆகவேண்டும். எனவே மனிதன், ''நான் செய்த பாவம் குறைவு அல்லது பாவமே செய்யவில்லை! எனக்கு ஏன் அதிக தண்டனை? என்று கேள்வி கேட்பதில் பொருள் இல்லை. ஏனென்றால், சர்வக்ஞனான (எல்லாமறிந்த) பகவான் எல்லோருக்கும் நண்பன்; பேராற்றல் படைத்தவன். அவருடைய நியாயத்தில் பாவத்திற்கு மீறிய தண்டனை யாருக்கும் கிடைக்காது. எனவே, கிடைத்த தண்டனை, முன்னால் செய்த ஏதோவொரு பாவத்திற்கு உரிய தண்டனைதான் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

இங்கே நான் கேள்விப்பட்ட ஒரு நிகழ்ச்சி நினைவிற்கு வருகிறது. ஒரு கிராமத்தில் ஒரு நல்லவர் வசித்து வந்தார். அவருடைய வீட்டிற்கு எதிரே ஒரு பொற்கொல்லனுடைய வீடு இருந்தது. அவனிடம் நிறைய தங்கம் வந்து கொண்டிருந்தது. அதைக் கட்டியாக மாற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தான். அதற்கு கூலியாக அவனுக்கு பணம் கிடைத்து வந்தது. ஒருநாள் அவனிடத்தில் அதிக தங்கம் சேர்ந்துவிட்டது. இரவில் காவல் புரியும் காவலாளிக்கு அது தெரிந்துவிட்டது. அவன் அந்த பொற்கொல்லனை இரவோடு இரவாகக் கொன்றுவிட்டு, தங்கம் வைத்திருந்த பெட்டியைத் தூக்கிக் கொண்டு போனான். இதனிடையே எதிர்வீட்டில் இருந்த நல்லவர் சிறுநீர் கழிக்க எழுந்து வெளியே வந்தார். அவர், அந்தக் காவலாளியைப் பிடித்துவிட்டார். ''இந்தப் பெட்டியில் என்ன கொண்டு போகிறாய்?'' என்று கேட்டார். அதற்கு காவலாளி, ''நீ சும்மா இரு, சத்தம் போடாதே. நாம் இருவரும் இதில் இருப்பதைப் பிரித்துக் கொள்வோம்''

என்றான். நல்லவர், ''நான் என்ன திருடனா?'' என்று கேட்டார். காவலாளி, ''இதோ பார்! உண்மையைப் புரிந்து கொள். நான் கூறுவதைக் கேள். இல்லை என்றால் தொல்லைதான்'' என்று அச்சுறுத்தினான். நல்லவரோ அஞ்சவில்லை. அந்த காவலாளி பெட்டியைக் கீழே வைத்துவிட்டு, அவரைப் பிடித்துக் கொண்டு தன்னுடைய ஊதுகுழலை எடுத்து ஊதினான். அந்தச் சத்தத்தைக் கேட்டவுடன் மற்ற இடங்களின் காவலாளிகளும் ஓடி வந்தார்கள். முதல் காவலாளி மற்றவர்களிடம், ''இந்த ஆள், இந்த வீட்டிலிருந்து பெட்டியை எடுத்துக் கொண்டு வந்திருக்கிறான். நான், இவனைப் பிடித்து இருக்கிறேன்'' என்றான். காவல் வீரர்கள் உள்ளே சென்றார்கள். பொற்கொல்லன் இறந்து கிடந்தான். காவலர்கள், அந்த நல்லவரைப் பிடித்து, அரசு அலுவலர்களிடம் ஒப்படைத்து விட்டார்கள். வழக்கு நீதிமன்றம் வந்தது. நல்லவர், ''நான் கொல்லவில்லை, இந்தக் காவல்காரன்தான் கொன்று விட்டான்'' என்றார். ஆனால், அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து, ''இவர் சொல்வது பொய். நாங்களே இரவில் இவரைப் பிடித்தோம்'' என்று கூறிவிட்டார்கள்.

வழக்கு நடந்தது. வழக்கின் முடிவில் நல்லவருக்குத் தூக்குத்தண்டனை விதிக்கப்பட்டது. அதைக் கேட்டு அவர் அலறினார். ''ஐயோ! இது என்ன அநியாயம்! இந்த பகவானுடைய ஆட்சியில் நியாயத்திற்கு இடமில்லையா? கொல்லாத நான் தண்டனையை அனுபவிக்க, கொன்ற இவன் ஒரு சங்கடமும் இல்லாமல் தப்பிக்கிறானே.'' நீதிபதியின் மனத்தில் நல்லவரின் வார்த்தைகள் ஒரு சலனத்தை ஏற்படுத்தின. ''இவர் கூறுவதுதான் உண்மை என்று தெரிகிறது. இதைத் தீர விசாரித்து விடவேண்டும்'' என்று எண்ணிய அவர், ஓர் உபாயம் செய்தார்.

பொழுது விடிந்ததும் ஒரு மனிதன் அழுதுகொண்டே வந்து, ''என்னுடைய சகோதரனை யாரோ கொன்று விட்டார்கள்; விசாரிக்க வேண்டும்'' என்று கேட்டுக்

கொண்டான். நீதிபதி, அந்த காவல்காரனையும், கைதியாய் இருந்த நல்லவரையும், அந்தப் பிணத்தை எடுத்து வர அனுப்பினார். இருவரும் அந்த மனிதனுடன் பிணம் கிடந்த இடத்திற்குச் சென்றார்கள். அங்கே கட்டிலின் மேலே துணியால் மூடப்பட்டுப் பிணம் கிடந்தது. அங்கும் இங்கும் இரத்தம் சிதறியிருந்தது. அந்த இருவரும் கட்டிலுடன் பிணத்தை எடுத்துக் கொண்டுபோகத் தொடங்கினார்கள். அந்த மனிதனோ, ''நான் முன்னால் போய்கிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்று விட்டான். மற்ற இருவரும் கட்டிலுடன் போகும்பொழுது அந்த காவலாளி, அந்த நல்லவரிடம் கூறினான்— ''இதோ பார்! அன்று நீ, நான் கூறியதைக் கேட்டிருந்தால் பொன்னும் கிடைத்திருக்கும்; தூக்குத் தண்டனையும் கிடைத்திருக்காது. உண்மையின் பயனைப் பார்த்தாயா?'' கைதி சொன்னார்— ''நான் நியாயமாக நடந்து கொண்டேன்; தூக்குத் தண்டனை என்னவோ கிடைத்து விட்டது. கொலை செய்தது நீ; தண்டனை பெற்றது நான். இந்த பகவானது அரசாங்கத்தில் நியாயத்திற்கு இடமில்லை!''

கட்டிலின் மேல் இருந்தது உண்மையான பிணம் அல்ல. அதில் ஒரு மனிதன் படுத்திருந்தான். அவன், இவர்கள் இருவரும் உரையாடியதைத் தன்னிடம் இருந்த ஒரு காகிதத்தில், அப்படியே எழுதிக் கொண்டான். கட்டில் நீதிபதிக்கு எதிரே இறக்கி வைக்கப்பட்டது. கட்டிலில் படுத்திருந்த அந்த மனிதன் துணியை உதறிவிட்டு எழுந்தான். நீதிபதியிடம் நடந்தவை அனைத்தையும் கூறிவிட்டான். நீதிபதி இதைக் கேட்டு வியப்படைந்தார். கொலை செய்த காவலாளி திடுக்கிட்டு நின்றான். அவன் விசாரணைக்காகச் சிறையில் அடைக்கப்பட்டான்.

நீதிபதிக்கு மனத்தில் ஏதோ உறுத்தல் இருந்தது. அவர் கைதியான நல்லவரைத் தனியே கூப்பிட்டு, ''நான், உன்னைக் குற்றமற்றவனாகவே கருதுகிறேன். ஆனால், உண்மையைக் கூறிவிடு. இந்தப் பிறவியில் வேறு ஏதாவது கொலை செய்தது உண்டா?'' என்று கேட்டார். அதற்கு அவர் கூறிய பதில் இது·

‘‘ஒரு கயவன் இருந்தான். அவன் திருட்டுத்தனமாக, என் மனைவியிடம் வந்து கொண்டிருந்தான். நான் கூறிப் பார்த்தேன். அவன் கேட்பதாக இல்லை. ஓர் இரவு, நான் வீட்டிற்கு வந்தபோது, அவனை அங்கே பார்த்தேன். கோபம் கொண்ட நான், அவன் தலையை வெட்டி, வீட்டிற்குப் பின்னால் உள்ள ஆற்றில் எறிந்துவிட்டேன். இது யாருக்கும் தெரியாது.’’ அவர் கூறியதைக் கேட்ட நீதிபதி பின்வருமாறு கூறினார்— ‘‘உனக்குக் கிடைத்த தூக்குத்தண்டனை உறுதி. ஏனெனில், நான் இது வரையில், லஞ்சம் வாங்குவது, வேறு தவறிழைத்தல் முதலிய எந்த நியாய விரோதமான செயலையும் செய்ததில்லை. அப்படிப்பட்டத் தூய மனதுள்ள நான் எவ்வாறு தவறாக தீர்ப்பளிக்க முடியும்? என் கை உனக்குரிய தண்டனையைத்தான் தீர்ப்பாக எழுதியிருக்கிறது. இப்பொழுதுதான் என் மனம் சந்தோஷமாக இருக்கிறது. அந்தப் பாவத்தின் தண்டனையை நீ அனுபவி. இந்தக் கொலையின் தண்டனையை அவன் (காவலாளி) அனுபவிப்பான்.’’

(அந்த நல்லவர், திருடனைக் கண்டுபிடித்துக் கொடுத்து, தன்னுடைய கடமையைத்தான் செய்தார். ஆனால், அவருக்குக் கிடைத்த அந்த தண்டனை, கடமையைச் செய்ததற்குக் கிட்டிய பலனல்ல. வெகுநாட்களுக்கு முன்பு செய்த கொலைக்கு, இன்று கிடைத்த தண்டனை. கடமையைச் செய்ததனால் கிடைத்த பயன் என்னவென்றால், இகலோகத்தில் தண்டனை கிடைத்தாலும், பரலோகத்தில் தண்டனையில் இருந்து விடுபட்டு விடுவான். ஏனெனில், பாவத்தின் பயன் இங்கேயே துய்க்கப்பட்டுவிட்டது. இங்கே கிடைத்தது, பரலோகத்தில் கிடைக்கப் போகின்ற மனநிறைவுக்கு எதிரே, பயங்கர தண்டனையில் இருந்து விடுபடுகின்ற மகிழ்ச்சிக்கு எதிரே, இங்கே அனுபவித்த தண்டனை மிகவும் குறைவு. இந்த குறைந்த கஷ்டத்தால் பரலோகத்தில் பெரிய நன்மை கிடைக்கிறது.)

இந்தக் கதையிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவென்றால், எப்போதோ செய்கின்ற பாவத்தின்

தண்டனை, எப்போது வந்து சேரும்? என்று சொல்ல முடியாது. பகவானின் நியாயம் வழங்கும் முறை விசித்திரமானது. பழைய புண்ணியம் வலிவாக இருந்தால், பாவத்தின் பயன்கூட உடனே கிடைப்பதில்லை. புண்ணியம் முழுமையாக கரைந்த பிறகு, பாவம் தலையைத் தூக்கும். எனவே, பாவத்தின் தண்டனையை இந்தப் பிறவியிலேயோ அல்லது வேறு மறுபிறவியிலேயோ அனுபவித்தே ஆகவேண்டும்.

***அவச்யமேவ போக்தவ்யம் க்ருதம் கர்ம சுபாசுபம் |***
***நாபுக்தம் க்ஷீயதே கர்ம ஜந்ம கோடி சதைரபி ||***

**இதன் பொருள்:–** ‘‘செய்யப்பட்ட நல்ல, கெட்ட கர்மாக்களின் பயன் கண்டிப்பாக அனுபவிக்கப்பட வேண்டும். நூறு கோடிப் பிறவிகளானாலும் அனுபவிக்கப்படாத கர்மம் அழிவதில்லை.’’

இதுவரை பாவ கர்மாக்களின் பயன் கிடைக்கும் முறையைப் பற்றிப் பேசினோம். இதே விதமாக சொத்து, சுகம், மானம், மரியாதை, புகழ், நோயின்மை முதலிய அனுகூலமான நிலைகளின் உருவத்தில், புண்ணிய கர்மாக்களின் எந்த அம்சத்தின் பயன்கள் அனுபவிக்கப்பட்டனவோ, அந்தப் பகுதி கரைந்து போகும். ஆனால், எவ்வளவு மிச்சம் இருக்கிறதோ, அதை பரலோகத்தில் அனுபவித்துக் கொள்ளலாம். புண்ணிய கர்மாக்களின் முழுப் பயனும் இங்கே அனுபவித்து விட்டோமானால், புண்ணியமும் இங்கேயே முடிந்துவிடும்.

கிரியமாண கர்மாக்களின் (நிகழ்நிலை வினைகளின்) ஸம்ஸ்காரப் பகுதிக்கும் இரண்டு பேதங்கள் உண்டு. 1. சுத்தமான அல்லது தூய ஸம்ஸ்காரம், 2. அசுத்தமான அல்லது தீய ஸம்ஸ்காரம். சாஸ்திரம் விதித்த கர்மாக்களைச் செய்வதனால் ஏற்படுகின்ற ஸம்ஸ்காரங்கள் சுத்தமானவை; தூயவை. சாஸ்திரங்கள், நீதி, உலக மரியாதை – இவைகட்கு எதிராகச் செய்யப்படும் கர்மாக்களினால் ஏற்படும் ஸம்ஸ்காரங்கள் அசுத்தமானவை; தூய்மையற்றவை.

இந்த இரு வகை கர்மாக்களினால் ஏற்படுகின்ற ஸம்ஸ்காரங்களே சுபாவமாகின்றன. அதாவது மனிதன், இயற்கையாக செயல்படும் தன்மையாகின்றன. அவற்றில் அசுத்தப் பகுதியை முற்றிலுமாக அழித்துவிட்டோமானால் தன்மை சுத்தமானதாக, கறையற்றதாக, பவித்திரமானதாக அல்லது தூயதாக ஆகிறது. ஆனாலும், ஏற்கனவே செய்துவிட்ட கர்மாக்களின் காரணமாக ஏற்பட்டிருக்கிற தன்மை, அந்தக் கர்மங்களின் வித்தியாசத்தின் காரணமாக, ஜீவன்முக்தரான மனிதர்களின் சுபாவத்திலும் மாறுபாடு ஏற்படுகிறது. இந்தச் சுபாவத்தின் மாறுபாட்டின் காரணமாக, அவர்கள் மூலமாகவும் மாறுபட்ட கர்மங்கள் நிகழ்ந்து விடுகின்றன. ஆனால், அவை குற்றம்–குறை கொண்டவையாக இருப்பதில்லை. ஆகவே, அவை முற்றிலும் சுத்தமாக இருக்கின்றன. அவைகளினால் உலகுக்கு நன்மையே ஏற்படுகிறது. ஸம்ஸ்காரப் பகுதியினால் எந்தச் சுபாவம் அல்லது தன்மை ஏற்படுகிறதோ, அது ஒரு வகையில் பார்த்தால், மிகவும் பலம் பொருந்தியதாக இருக்கிறது.

***'ஸ்வபாவோ மூர்த்நி வர்த்ததே'*** (சுபாவம் பலம் பொருந்தியதாக இருக்கிறது.) எனவே, அதை அழிக்க முடியாது. பின்வரும் சுலோகத்தைப் பாருங்கள்—

***வ்யாக்ரஸ் துஷ்யதி காநநே ஸுகஹநாம்***
***ஸிம்ஹோ குஹாம் ஸேவதே ।***
***ஹம்ஸோ வாஞ்சதி பத்மிநீம் குஸுமிதாம்***
***க்ருத்ர: ஸ்மசாநே ஸ்த்தலே ॥***
***ஸாது: ஸத்க்ருதி ஸாதுமேவ பஜதே***
***நீசோபி நீசம் ஜநம் ।***
***யா யஸ்ய ப்ரக்ருதி: ஸ்வபாவ ஜநிதா***
***கேநாபி நத்யஜ்யதே ॥***

***இதன் பொருள்:–*** புலி அடர்ந்த காடுகளில் ஆனந்தமாய் இருக்கிறது; சிங்கம் ஆழ்ந்த குகையைத் தேடுகிறது; அன்னம் மலர்ந்த தாமரையை விரும்புகிறது; கழுகு

மயானத்தில் இருக்க ஆசைப்படுகிறது; நல்லவன் நல்ல நடத்தையுள்ள நல்லவர்களுடன் வாழ விரும்புகிறான்; கீழோன் கீழ்ப்பட்டவர்களுடன் சேர்கிறான். உண்மைதான், சுபாவத்தின் காரணமாக ஏற்பட்ட பிரகிருதி அல்லது பழக்கத்தை யாரும் விட முடிவதில்லை.

இவ்விதமாக பிராமணர்கள், க்ஷத்திரியர்கள் முதலிய வர்ணத்தார்களின் இயற்கை தன்மை, அவர்கள் செய்கின்ற செயல்களில் முக்கியப் பங்கு வகிக்கிறது. இதனால்தான் பகவான் அர்ஜுனனிடம், ''நீ மோகம் காரணமாக, எந்தச் செயலைச் செய்ய மறுக்கிறாயோ, அதே செயலை உன்னுடைய இயற்கை செயல் தன்மையினால் தூண்டப்பட்டுத் தடுக்க முடியாமல் அச்செயலைச் செய்துவிடுவாய்'' (கீதை 18/60) என்றார்.

இதில் சிந்திக்க வேண்டிய செய்தி ஒன்று இருக்கிறது. ஒருபுறம் சுபாவத்தின் ஆற்றல் மிக அதிகம். அதை யாரும் விடமுடியாது. மறுபக்கம் மனிதப்பிறவியின் முயற்சிகளுக்கும் அபார ஆற்றலுண்டு. மனிதன் எதைச் செய்யவும் சுதந்திரம் உள்ளவனாக இருக்கிறான். இப்போது கேள்வி என்னவென்றால், இந்த இரண்டில் எது வெற்றி அடையும், எது தோல்வி அடையும்? (சுபாவமா, முயற்சியா?)

இதில் வெற்றி, தோல்வி என்ற பேச்சுக்கே இடமில்லை. அதனதன் இடத்தில் இரண்டுமே வலிவானவை. இங்கே சுபாவத்தை விடமுடியாது என்று சொல்வது, ஜாதி மாத்திரத்தின் சுபாவமாகும். அதாவது, உயிர் எந்த வர்ணத்தில் பிறந்திருக்கிறதோ, அதற்கேற்றவாறு அமைந்த சுபாவம் மாற்றப்பட முடியாதது. ஆகவே, அந்தச் சுபாவத்தைக் குறை கூற முடியாது. அது குறையற்றது. உதாரணமாக பிராமண–க்ஷத்திரிய வர்ணத்தார்களின் இயற்கையை மாற்ற முடியாது; மாற்றவும் தேவையில்லை; சாஸ்திரமும் மாற்றச் சொல்லவில்லை. ஆனால், இந்தச் சுபாவத்தின் அசுத்தப் பகுதிகளான விருப்பு–வெறுப்பு எனும் தீய அம்சத்தை

அழிப்பதற்கு பகவான், மனிதனுக்குத் திறமை கொடுத்திருக்கிறார். எந்த தோஷங்களின் காரணமாக, மனிதர்களுடைய சுபாவம் அசுத்தமாகியிருக்கிறதோ, அந்த தோஷங்களை அழித்து, மனிதன் தன் விருப்பப்படித் தன் சுபாவத்தைச் சுத்தமாக்கிக் கொள்ள முடியும். மனிதன் முயன்றால் கர்மயோகத்தின் வாயிலாக முயற்சிகளைச் செய்வதன் மூலம் ராக–த்வேஷத்தை (விருப்பு–வெறுப்பை) அழித்து, சுபாவத்தை நல்லதாக்கிக் கொள்ளலாம்.

*இந்த்$_3$ரியஸ்யேந்த்$_3$ரியஸ்யார்தே$_2$*
*ராக$_3$த்$_3$வேஷௌ வ்யவஸ்தி$_2$தௌ ।*
*தயோர்ந வஶமாக$_3$ச்சே$_2$த்–*
*தௌ ஹ்யஸ்ய பரிபந்தி$_2$னௌ ॥*

*(ஸ்ரீமத் பகவத்கீதை 3/34)*

''புலன்கள், புலன்களின் நுகர்பொருட்களில் விருப்பு, வெறுப்பு என்பதான (அனுகூலம், பிரதிகூலம் ஆகியவற்றின் அடிப்படையில்) நிலைப்பாடு கொண்டுள்ளன. அவ்விரண்டின் வசத்தில் (மனிதன்) இருக்கக்கூடாது. ஏனெனில், அவையிரண்டும் அவனுக்கு (ஸாதனநெறிக்கு) தடையான எதிரிகளாகும்.''

பக்தியோகத்தின் மூலமாக எப்பொழுதும் எம்பெருமானிடம் சரண்புகுந்து, தன்னுடைய சுபாவத்தை மனிதன் மாற்றிக் கொள்ளலாம்; சுத்தமானதாக ஆக்கிக் கொள்ளலாம் (18/62). இந்தவிதமாகப் பார்த்தால் பிரகிருதியின் (சுபாவத்தின்) வலிவும் நிரூபிக்கப்படுகிறது; மனிதனின் சுதந்திரமும் நிறுவப்படுகிறது. முற்றின பொருளாக சுபாவத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வதில் பிரகிருதி முதன்மை வகிக்கிறது. அசுத்தத் தன்மையை நீக்குவதில் மனிதனுக்குச் சுதந்திரமுண்டு. அந்த சுதந்திரம் அசுத்த நீக்கத்திற்கு முக்கியம்.

எப்படியென்றால் இரும்பினாலான வாள் ஸ்பரிச வேதிக்கல்லைத் தொட்டால் தங்கவாள் ஆகிவிடும். ஆனால், அதன் அமைப்பு, வலிமை, வெட்டும் தன்மை – இவற்றில் மாறுபாடு ஏற்படாது. இவ்விதம் தங்கமாக்குவதில் ஸ்பரிச

வேதிக்கல்லுக்கு முக்கியப் பங்கு இருந்தது. ஆனால் வலிமை, கூர்மை, தோற்றம் – இவற்றில் வாளின் தன்மைக்கு முக்கியப் பங்கு இருந்தது. எனவே, எவர்கள் தங்களுடைய சுபாவத்தை முழு அளவுத் தூய்மை ஆக்கிக் கொண்டு விடுகிறார்களோ, அவர்களின் கர்மாக்களும் முழுமையாக சுத்தமாய் இருக்கின்றன. சுபாவம் சுத்தமானாலும் வர்ணம், ஆசிரமம், சம்பிரதாயம், சாதனை முறை, நம்பிக்கைகள் – இவற்றின் காரணமாக செய்கைகளில் மாறுபாடு காணப்படும். எடுத்துக்காட்டாக, ஒரு பிராமணன் உண்மை தத்துவத்தைப் புரிந்து கொண்ட பிறகு, உணவு, நீர் முதலியவைகளில் பவித்திரத் தன்மையைக் காக்க முயல்வான். தன் கையாலேயே உணவு செய்து அருந்துவான். ஆனால், ஒரு ஹரிஜனனுக்கோ அல்லது சாதாரண வர்ணத்தானுக்கோ தத்துவ போதம் ஏற்பட்டாலும், அவன் உணவு முதலியவற்றின் சுத்தத்தைப் பார்க்க மாட்டான். பிறர் எச்சிலையும்கூட உண்பான். ஏனென்றால், அவனுடைய சுபாவம் அப்படி அமைந்துவிட்டது. ஆனால், அந்தச் சுபாவம் அவனுக்கு குறை உள்ளதாக இராது.

இந்த ஜீவனுக்கு 'அஸத்துடன்' (பொய்ப் பொருள்களுடன்) சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்ளும் சுபாவம் அநாதி காலமாகவே இருந்து வருகிறது. அதனால்தான் அவன் பிறப்பிறப்பு வட்டத்தில் சிக்கிக் கொண்டு, மாறி மாறி உயர்ந்த–தாழ்ந்த யோனிகளில் பிறக்கிறான். அஸத்துடன் சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்ளும் சுபாவத்தை அவன் சுத்தமாக்கிக் கொள்ள முடியும். அதாவது காமனா, மமதா, தாதாத்மியம் (இச்சைகள், தனதென்னும் எண்ணம், பிரகிருதியிடம் ஈடுபாடு) என்ற மூன்றையும் அழித்துவிட்டால் சுபாவம் சுத்தமாகிவிடும். அப்படி அவற்றிலிருந்து நீங்கிய சுபாவம் குற்றமுள்ளதாக இராது. அந்தச் சுபாவத்தை அழிக்க வேண்டுவதில்லை.

மனிதன் அகங்காரத்தின் பிடியை விட்டுவிட்டு, முழுமையாக பகவானைச் சரணடைந்துவிட்டால், அவன்

சுபாவமானது ஸ்பரிச வேதிக்கல் பட்ட இரும்பு தங்கமாவது போல் சுத்தமாகிவிடும். சுபாவம் சுத்தமான பிறகு, சுபாவம் தந்த செயல்களைச் செய்யும்பொழுது, அவனுக்கு குற்றமோ, பாவமோ ஏற்படுவதில்லை (கீதை 18/47). முழுமையாக பகவானைச் சரணடைந்த பக்தனுக்குப் பிரகிருதியுடன் ஒட்டுதல் எதுவும் இருப்பதில்லை. அந்த பக்தனின் வாழ்வில் பகவானுடைய சுபாவமே செயல்படுகிறது. பகவான் எல்லா உயிர்களுக்கும் நண்பன் (கீதை 5/29). அதனால், பக்தனும் எல்லா உயிர்களுக்கும் நேயனாகிவிடுகிறான்!

***ஸுஹ்ருத$_3$: ஸர்வதே$_3$ஹிநாம் (ஸ்ரீமத் பாகவதம் 3/25/21)***

இந்தவிதமாகக் கர்மயோகத்தின் கண்ணோட்டத்தில் மனிதன் ராக–த்வேஷத்தை விட்டால், அப்பொழுது அவனுடைய சுபாவம் சுத்தம் அடைகிறது; வளர்கிறது; வளம் பெறுகிறது. அப்போது அவன், சுயநல எண்ணத்தை விட்டுவிட்டு உலகின் நன்மையைப் பற்றியே எண்ணுகிறான். அந்த எண்ணம் தானாகவே ஏற்பட்டுவிடுகிறது. பகவானின் சுபாவம் எந்த உயிர்க்கும் நன்மை செய்வதாகும் (*'ஸர்வபூ$_4$தஹிதே ரதா:'* **கீதை** *5/25, 12/4*). அவனுடைய செயல்கள் எல்லாம் உயிரினத்தின் நன்மைக்காக என்று ஆகும்பொழுது, அவன் பகவானுடன் ஒன்றிவிடுகிறான். அதாவது, எல்லா உயிருக்கும் அன்புடன் நன்மை புரியும் பேராற்றலைப் பெற்று விடுகிறான். அவனிடம் நண்பனாய் இயங்கும் ஆற்றல் செயல்படுகிறது. உள்ளபடி எல்லா உயிருக்கும் நண்பனாக இருக்கும் இந்த தெய்வ ஆற்றல், மனிதனுக்கு எளிதில் கிடைக்கக் கூடியதுதான். ஆனால் அஹங்காரம், ராக–த்வேஷம் – இவற்றின் காரணமாக அந்த ஆற்றலுக்குத் தடை ஏற்பட்டுவிடுகிறது. அந்த ஆற்றல் செயல்படுவதில்லை. மகாபுருஷர்களிடம் தன்முனைப்பு (அஹங்காரம்) கிடையாது; விருப்பு–வெறுப்பு (ராக–த்வேஷம்) கிடையாது. அதனால், அவர்களிடத்தில் இந்த நட்பாற்றல் செயல்பாடு கொள்கிறது.



# 2. ஸஞ்சித கர்மம்




அநேக மனிதப் பிறவிகளில் எந்தக் கர்மங்கள் அந்தக்கரணத்தில் சேர்ந்திருக்கின்றனவோ, அவை ஸஞ்சித கர்மங்கள் என்று கூறப்படுகின்றன. அந்தத் தொகுப்பில் பயன் பகுதி, ஸம்ஸ்காரப் பகுதி இரண்டுமே இருக்கும். அவற்றில் பயன் பகுதியிலிருந்து பிராரப்தம் விளைகிறது. ஸம்ஸ்காரப் பகுதியிலிருந்து 'ஸ்புரணா' (ஸ்புரித்தல் அல்லது முளைப்பு) ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. அந்த முளைப்புக்களிலும் புதிதாகச் செய்யப்பட்ட நிகழ்நிலை கர்மங்களின் ஸஞ்சிதமாய் இருக்கின்றவற்றினுடைய முளைப்பே ஏற்படுகிறது. சிலசமயம் ஸஞ்சிதத்தில் சேர்ந்திருக்கின்ற பழைய கர்மங்களின் முளைப்பும் வெளியாகலாம்.

முளைப்பு (ஸ்புரணா) ஸஞ்சிதத்திற்கு ஏற்றவாறும் நிகழ்கிறது. பிராரப்தத்திற்கு ஏற்றவாறும் நிகழ்கிறது. ஸஞ்சிதத்திற்கு ஏற்றவாறு ஏற்படும் 'முளைப்பு' மனிதனை வேலை செய்யக் கட்டாயப்படுத்துவதில்லை. ஆனாலும் ஸஞ்சிதத்தின் முளைப்பில் ராக–த்வேஷம் சேர்ந்துவிடுமாயின், அது செயலின் தீர்மானமாகி, மனிதனை வேலை செய்யக் கட்டாயப்படுத்தலாம். ஆனால், அதில் விதிகள் சொல்லும் (விகித) கர்மங்களையே செய்யத் தூண்டும். தடுக்கப்பட்ட (நிஷித்த) கர்மங்களைச் செய்யத் தூண்டாது. ஏனெனில், விவேகத்தை முக்கியமாகக் கொண்ட இந்த மனித உடல் (நிஷித்த) கர்மங்களைச் செய்வதற்காக ஏற்பட்டது அல்ல. எனவே, விவேக ஆற்றலை அதாவது தகுந்தது, தகாதது

என்று பிரித்து, தக்கதைச் செய்யும் ஆற்றலை வலிவடையச் செய்து, நிஷித்தத்தை நீக்கிவிடும் பொறுப்பு அவனுக்கு உண்டு. இந்த விஷயத்தில் அவன் சுதந்திரமானவன். இது எவ்விதம் என்றால், அதாவது முளைப்பு எவ்விதம் ஏற்படுகிறது என்றால் ஓர் எடுத்துக்காட்டுக் கூறலாம். ஒரு பாத்திரத்தில் முதலில் வெங்காயத்தைப் போடுவோம். மேலே வரிசையாக கோதுமை, கடலை, கம்பு, சோளம் முதலியவற்றைப் போட்டுவிட்டு, எடுக்கத் தொடங்கினால் முதலில் சோளம்தான் வெளியே வரும். ஆனால், இடையிடையே வெங்காயமும் வரலாம். இந்த எடுத்துக்காட்டு முழுமையாக ஒத்து வராது. ஏனெனில் வெங்காயம், கோதுமை முதலிய பதார்த்தங்கள் பருப்பொருள்கள். ஆனால், ஸஞ்சித கர்மமோ உருவமற்றது. இந்த எடுத்துக்காட்டு புதிய நிகழ்நிலைக் கர்மங்களின் முளைப்பு அதிகமாகவும், பழைய கர்மங்களின் முளைப்பு சிற்சில சமயங்களிலும் இருக்கும் என்பதைக் காட்டவே கொடுக்கப்பட்டது.

இவ்விதம் தூக்கம் வரும் பொழுதும்கூட அதிலும் முளைப்பு இருக்கிறது. தூக்கத்தில் விழிப்புநிலை அமுக்கப்பட்டு விடுகிறது. அதனால், ஸஞ்சிதத்தின் அந்த முளைப்பு கனவு உருவமாக தோற்றம் தருகிறது. இதை கனவுநிலை என்று கூறுகிறோம்.

விழிப்பு நிலையிலும் கூட விழிப்பு, கனவு, ஸுஷுப்தி (சுழுத்தி = கனவைக் கடந்த ஆழ்தூக்கநிலை) என்ற மூன்றும் இருக்கும். மனிதன் விழித்த நிலையில் வேலை செய்யும் பொழுது, அவன் விழிப்பில் விழித்த நிலையில் இருக்கிறான். விழித்த நிலையில் மனிதன் எந்த வேலையைச் செய்கிறானோ, அந்த வேலையைத் தவிர, திடீரென்று வேறு ஒரு செயலின் முளை ஏற்படுகிறது. இது விழிப்பின் கனவுநிலையாகும். விழிப்பு நிலையில், சில சமயங்களில் வேலை செய்து கொண்டிருக்கும் பொழுதே, ஒருவனுக்கு இந்த வேலையில் அல்லது முந்திய கர்மங்களினுடைய முளைப்பு ஏற்படாமல் இருக்கலாம். அதாவது, அவன் முனைந்து ஈடுபடாமல்

இருக்கலாம். அந்த நிலை விழிப்பில் ஆழ்தூக்க நிலை (ஸுஷுப்தி நிலை) ஆகும்.

கர்மத்தைச் செய்யும் வேகம் அதிகமாக இருந்தால், விழிப்பு நிலையில் விழிப்பும் கனவும் அதிகமாக இருக்கும். ஸுஷுப்தி நிலை மிகவும் குறைவாக இருக்கும். ஒரு சாதகன் விழிப்பு நிலையில் ஸுஷுப்தியை இடைவிடாது இருத்திக் கொள்ள முடியுமானால், அவனுடைய சாதனை வேகத்தைப் பெறும். ஏனெனில், விழித்த ஸுஷுப்தி நிலையில் பரமாத்மாவுடன் சாதகனுக்குத் தானாகவே மறைவற்ற உறவு ஏற்பட்டுவிடுகிறது. இவ்விதம் ஸுஷுப்தி நிலையில் சம்சாரத்தில் (உலகுடன்) உறவு முறிந்துவிடுகிறது. ஆனால், அறிவின் போக்கு அஞ்ஞானத்தில் (அவித்தையில் = அறியாமையில்) லயித்து விடுமானால், ஆன்ம ஸ்வரூபத்தின் தெளிந்த அனுபவம் ஏற்படாது. ஆனால், விழித்த ஆழ்நிலை தூக்கத்தில் (ஸுஷுப்தியில்) புத்தி விழித்து இருக்குமானால், ஸ்வரூபத்தின் (தன்னுடைய உண்மை உருவத்தின்) தெளிந்த அனுபவம் ஏற்படும்.

இந்த 'விழித்த ஸுஷுப்தி' சமாதி அல்ல. ஏனெனில், இது தானே ஏற்படுவது. சமாதிக்குப் பயிற்சியின் மூலமாக விருத்திகளை (எண்ண ஓட்டங்களை) ஒருமுனைப்படுத்திக் கட்டுப்படுத்த வேண்டியிருக்கிறது. இதன் காரணமாகவே சமாதியில் புருஷ யத்னமும் (ஆத்ம முயற்சி) கூடவே இருக்கிறது. அதனால், உடலின் இருப்பு தேவைப்படுகிறது. ஸ்வரூபத்தில் மட்டும் இருக்கிற நிலையில்லை. ஆனால், 'விழித்த ஸுஷுப்தியில்' அகங்காரமோ, அப்யாஸமோ இல்லாமலேயே விருத்திகள் தாமாகவே அடங்கிவிடுகின்றன. அதனால் 'ஸ்வரூப ஸ்திதீ' ஏற்பட்டுவிடுகிறது. அதாவது, ஸ்வரூபத்தின் அனுபவம் கிடைத்துவிடுகிறது.

கனவு நிலையில் புத்திக்குக் கவனம் இருக்காது. அதனால் முறை எது? முறை மீறுவது எது? அடுத்தது எது? என்கின்ற விவஸ்தை இருக்காது. எப்படியென்றால், டில்லி நகரம் காணப்படும்; ஆனால், பம்பாயின் கடைத்தெருக்களும்,

அவற்றில் கல்கத்தாவின் கடைகளும் காணப்படும். ஒரு உயிருள்ள மனிதனைப் பார்ப்பான்; இறந்த வேறொரு மனிதனுடன் பேச்சு நடத்துவான்.

விழித்த நிலையில் மனிதனுடைய மனத்தில் பலவிதமான செயல் முளைப்புகள் (ஸ்புரணாக்கள்) ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. எப்பொழுது விழிப்புநிலையில் எவனது உடல், இந்திரியங்கள், மனம் – இவற்றின்மேல் புத்திக்கு உள்ள அதிகாரம் (கட்டுப்பாடு) நீங்கிவிடுகிறதோ, அப்பொழுது மனிதன், மனத்தில் தோன்றியதைப் பேசுகிறான். இவ்விதம் தக்கது, தகாதது என்று தீர்மானிக்கும் ஆற்றல் வேலை செய்வதில்லை. அப்பொழுது அவன் எளிய 'நேர்மையான பித்தன்' என்று கூறப்படுகிறான். எவனது உடல், இந்திரியங்கள், மனம் – இவற்றின்மேல் புத்தியின் அதிகாரம் இருக்கிறதோ, அவன் எது சரியோ, அதைப் பேசுவான். அவன் சரியல்ல என்று கருதுவதைப் பேசமாட்டான். அவன் கவனமாய் இருப்பதனால் எப்பொழுதும் நல்ல அறிவுடன் இருக்கிறான். அவன் 'கெட்டிக்காரப் பித்தன்'.

எவ்விதம் மனிதன் 'பரமாத்மப் பிராரப்தி'யை எதுவரை அடையாமல் இருப்பானோ, அதுவரை அவன் தன்னை இந்த முளைப்புகளிலிருந்து காத்துக் கொள்ள முடியாது. பரமாத்மப் பிராரப்தி ஏற்பட்டவுடன் எல்லா முளைப்புக்களும் முழுமையாக அழிந்துவிடும். அதனால்தான் 'ஜீவன் முக்தர்கள்' ஆன மனிதர்களின் மனத்தில் தூய்மையற்ற கெட்ட எண்ணங்கள் வருவதேயில்லை. அவர்களுடையது என்று கூறப்படுகின்ற உடலில் பிராரப்தத்தின் காரணமாக நோய்–நொடியினால் சிலசமயம் மயக்கம் ஏற்படலாம்; உன்மாதம் (பித்து நிலை) ஏற்படலாம். அப்பொழுதும்கூட அவர்கள் சாஸ்திரம் தடை செய்த பேச்சைப் பேச மாட்டார்கள்; நிஷித்தங்களைச் செய்ய மாட்டார்கள். ஏனெனில், அவர்கள் அந்தக்கரணம் (உட்புலன்கள்) சுத்தமாக இருப்பதால், சாஸ்திரங்கள் தடை செய்ததைப் பேசுவதோ, செய்வதோ, அவர்கள் எண்ணத்தில் ஏற்படாது.



# 3. பிராரப்த கர்மம்




ஸஞ்சிதத்திலிருந்து எந்தக் கர்மங்கள் பயன்தர முன் வருகின்றனவோ, அந்தக் கர்மங்களை நாம் 'பிராரப்த கர்மம்' என்று கூறுகிறோம். (*'ப்ரகர்ஷேண ஆரப்த: ப்ராரப்த:'*) இதன் பொருள், எது வேகத்துடன் பயன்கொடுக்க ஆரம்பித்துவிட்டதோ, அது பிராரப்தம். அதாவது, நன்கு தொடங்கியுள்ளது என்று பொருள். பிராரப்தத்தினுடைய பயன்கள் அனுகூலமான (சாதகமான) அல்லது பிரதிகூலமான (சாதகமற்ற) சூழ்நிலைகளின் உருவத்தில் தோன்றுகின்றன. ஆனால், அவற்றை அனுபவிக்கும் முறையில் உயிர்களின் பிரவிருத்தி (செயல் அல்லது மனப்போக்கு) மூன்றுவிதமாக இருக்கும். ஒன்று தன்னிச்சைப்படியானது, 2. தன்னிச்சைப்படி அல்லாதது; அதாவது, தெய்வ சங்கல்பப்படி நடப்பது, 3. மற்றவர் விருப்பப்படிச் செயல்படுவது.

***எடுத்துக்காட்டு:–*** 1. ஒரு வியாபாரி பொருளை வாங்கி விற்றான். அவனுக்கு லாபம் கிடைத்தது. மற்றொரு வியாபாரி, இதே மாதிரி வாங்கி விற்றான்; நஷ்டம் ஏற்பட்டது. இவ்விதம் லாபமோ, நஷ்டமோ ஏற்படுவது நல்ல அல்லது தீய செயல்களால் ஏற்பட்ட பிராரப்த வினையின்

பலன். ஆனால், பொருள் வாங்குவது அவர்கள் தாம்கொண்ட இச்சைப்படி நடந்ததாகும்.

2. ஒரு மனிதன் அவன்போக்கில் போய்க் கொண்டிருந்தான். இடையே எதிர்ப்பட்ட ஓர் ஆற்றில் பணத்துடன் ஒரு பெட்டி மிதந்து வந்தது. அதை அவன் எடுத்துக் கொண்டான். அதுபோல் மற்றொருவனும் எங்கேயோ போய் கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு மரத்தின் கிளை ஒடிந்து, அவன் தலையில் விழுந்து காயம் ஏற்பட்டது. இங்கே பணம் கிடைப்பதோ, காயப்படுவதோ, அவர்கள் செய்த நல்ல—தீய செயல்களால் ஆன கர்மங்களின் பிராரப்த அம்சத்தின் (பயன் கொடுக்கத் தொடங்கியப் பகுதியின்) விளைவு ஆகும். ஆனால், பணப்பெட்டி கிடைப்பதோ, ஒடிந்த கிளை விழுவதோ, அவர்கள் இச்சைப்படி நடக்காமல் தெய்வத்தின் விருப்பப்படி நிகழ்ந்ததாகும்.

3. ஒரு பணக்காரன் ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொண்டான். அக்குழந்தை அவனது வாரிசானபடியால், அவன் சொத்து அதற்குச் சேர்ந்தது. இவ்விதமே திருடர்கள் ஒரு பணக்காரனின் சொத்தைத் திருடிவிட்டார்கள். தத்தெடுத்தக் குழந்தைக்குப் பணம் கிடைப்பதும், திருடர்கள் கவரப் பணம் போய் விடுவதும், அந்த பணக்காரர்களுடைய நல்ல—தீய கர்மங்களினால் விளைந்த பிராரப்தமான கர்மங்களின் பயனாகும். ஆனால், தத்துப் போவதும், திருட்டுப் போவதும் பிறர் இச்சையினால் ஏற்பட்ட விளைவு.

இங்கே ஒரு கருத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். கர்மங்கள் செயல்களாகத் தோன்றா. ஆனால், சூழ்நிலைகளாக வரும். அதாவது, பிராரப்த கர்மத்தின் பயனாகத் தோன்றுவது தக்க சூழ்நிலையாகவே இருக்கும். நிகழ்நிலை கர்மங்களைப் பிராரப்தத்தின் பலன்களாக எண்ணிக் கொள்ளத் தொடங்கி விட்டோமானால், சாஸ்திரங்களும் பெரியவர்களும், 'இதைச் செய், அதைச் செய்யாதே' என்று கூறுகின்ற விதிகளும் தடைகளும் பொருளற்றுப் போய்விடும். மற்றொன்று:—

எப்படிப்பட்ட கர்மங்களைச் செய்திருந்தோமோ, அவற்றிற்கு ஏற்றவாறே பிறவி ஏற்படும்; கர்மங்களும் ஏற்படும். அப்பொழுது அந்தக் கர்மங்கள் மேலும் புதிய கர்மங்களைச் செய்விக்கும். இவ்விதம் அந்தக் கர்ம பரம்பரை போய்க் கொண்டே இருக்கும். இதற்கு முடிவே இருக்காது.

பிராரப்த கர்மங்களின் காரணமாகக் கிடைக்கின்ற பயன்கள் இரு வகையாகும். 1. கிடைத்துவிட்ட பயன், 2. இதுவரை கிடைக்காத பயன். உயிர்களுக்கு எதிரே அனுகூலமான அல்லது பிரதிகூலமான (சாதக, பாதக) சூழ்நிலை வருகிறதே, அது கிடைத்துவிட்ட பயனாகும். இதே பிறவியிலேயே பின்னர் வர இருக்கிறதே, அந்தச் சூழ்நிலை, அது இதுவரை கிடைக்காத பயனாகும். (கிடைக்க இருக்கின்ற பயனாகும்.)

நிகழ்நிலை கர்மங்களின் எந்தப் பயனம்சம் ஸஞ்சிதத்தில் சேர்ந்து இருக்கிறதோ, அதுதான் சாதகமான அல்லது பாதகமான அல்லது சாதக–பாதகம் கலந்த சூழ்நிலையின் உருவத்தில் உயிர்களுக்குக் கிடைக்கிறது. ஸஞ்சிதம் இருக்கின்ற வரையில் பிராரப்தமும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். இந்தச் சூழ்நிலை உயிர்களை இன்புறவோ, துன்புறவோ கட்டாயப் படுத்துவதில்லை. மாறும் குணமுடைய சூழ்நிலையுடன் இணைந்து கொள்வதுதான் சுகமோ, துக்கமோ அடைய முக்கியக் காரணம். எவன் இந்த பரிஸ்திதி(சூழ்நிலை)யுடன் இணைய வேண்டும் என்று எண்ண மாட்டானோ, அவன் விவேகம் நிறைந்தவன். அவன் சுகம் அடைவதுமில்லை; துக்கம் அடைவதுமில்லை. அவன் நிலை எப்போதும் 'ஸாம்யாவஸ்தை'யில் அதாவது சமநிலையில் இருக்கும். அதுவே அவனுடைய ஸ்வரூப நிலையாகும்.

கர்மங்களில் மனிதனுக்குப் பிராரப்தம் வலிவுள்ளதா அல்லது புருஷயத்னம் (மனித முயற்சி) வலிவுள்ளதா? இந்த இரண்டில் எது முக்கியம்? இவ்விஷயத்தில் அநேக ஐயப்பாடுகள் இருக்கின்றன. இதற்கொரு சமாதானம்

(முடிவு) ஏற்பட வேண்டுமென்றால், முதலில் பிராரப்தம் என்றால் என்ன? புருஷார்த்தம் என்றால் என்ன? என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

மனிதனுக்கு நான்கு வகையான விருப்பங்கள் ஏற்படுகின்றன. அவை 1. தர்மம், 2. பொருள், 3. போகம் அல்லது இன்பம், 4. விடுதலை அல்லது முக்தி பற்றியவையாகும். நடைமுறை மொழியில் இந்நான்கினையும் தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் (அறம், பொருள், இன்பம், வீடு) என்று கூறுகிறோம்.

### *1. தர்மம்:–*

ஆசை கொண்டோ அல்லது ஆசைகளற்றோ செய்யப்படும் வேள்வி, தவம், தானம், விரதம், தீர்த்தயாத்திரை முதலியவை 'அறம்' அதாவது 'தர்மம்' ஆகும்.

### *2. பொருள்:–*

பணத்தைப் பொருள் என்று கூறுகின்றோம். சொத்து என்றாலும் அதுதான். சொத்து இருவகைகளாக இருக்கலாம். அவையாவன:– 1) ஸ்தாவரம் – நிலை பேறு உள்ளது, அசையாதது; 2) ஜங்கமம் – அசைவது. பொன், வெள்ளி, பணம், பூமி, நிலம், வீடு போன்றவை அசையாச் சொத்து. மாடு, பசு, எருமை, ஒட்டகம், ஆடு போன்றவை ஜங்கமம் அல்லது இடம் பெயரும் சொத்து.

### *3. காமம் அல்லது இன்பம்:–*

இது எட்டு வகையாக இருந்து இன்பம் கொடுக்கும். அவையாவன:– (அ) சப்தம் (ஒலி), (ஆ) ஸ்பரிசம் (ஊறு), (இ) ரூபம் (உருவம்), (ஈ) ரஸம் (சுவை), (உ) கந்தம் (மணம்), (ஊ) மானம் (மரியாதை), (எ) பெருமை, (ஏ) வசதி (நிம்மதியான இருப்பு) என்பனவாகும்.

### *(அ) சப்தம்:–*

சப்தம் இரண்டு வகைகளாக இருக்கும். 1) எழுத்து, 2) ஒலி அல்லது உச்சரிப்பு. இலக்கணம், அகராதி,

இலக்கியம், கதைகள், புதினங்கள் ஆகியவை எழுத்து வடிவம் கொண்ட சப்தங்கள்.

1) எழுத்து:–

எழுத்துச் சப்தங்களிலும் பத்து வகை ரஸங்கள் உண்டு. 1. சிங்காரம், 2. ஹாஸ்யம், 3. கருணை, 4. ரௌத்திரம், 5. வீரம், 6. பயானகம் அல்லது அச்சம், 7. பீபத்ஸம் (அருவருக்கத்தக்கது), 8. அத்புதம், 9. சாந்தம், 10. வாத்ஸல்யம் (சிறாரிடம் காட்டும் அன்பு). இந்தச் சுவைகள், சித்தம் இளகுவதால் ஏற்படுபவை. இவற்றையெல்லாம் பகவான் விஷயமாக பயன் கொண்டோமானால், அவை நமக்கு மங்களங்களைச் செய்விக்கும். இதை விட்டு நம்முடைய இன்பத்திற்காகப் பயன் கொள்வோமானால், நம்மை வீழ்ச்சிப் பாதையில் அழைத்துச் சென்றுவிடும்.

2) ஒலி:–

1. தோற்கருவி (மத்தளம், தவில், கஞ்சிரா, தப்லா, டோலக்), 2. துளைக்கருவி (புல்லாங்குழல், நாதஸ்வரம், ஷெனாய்), 3. தந்திக்கருவி (யாழ், வயலின், ஸிதார், ஸாரங்கி) போன்ற இசைக்கருவிகளிலிருந்து பெறும் ஒலி. இவ்வகை இசைக்கருவிகளால் பெறப்படும் ஒலிகளால் கிடைக்கின்ற சுகம் சப்த சுகமாகும்.

***(ஆ) ஸ்பரிசம் (தொடுதல் அல்லது ஊறு):–***

மனைவி, மகன், நண்பன் ஆகியவர்களுடன் சேரும்போது மற்றும் சூடு, குளிர், மிருதுவான பொருள்கள் – இவற்றுடன் நம்முடைய தோல் இணையும்போது ஏற்படுகின்ற இன்பம் ஸ்பரிச இன்பமாகும்.

***(இ) ரூபம் (உருவம் அல்லது காட்சி):–***

கண்களால் நாம் விளையாட்டு, வித்தைச் செயல்கள், திரைப்படம், காடு, மலை, குளம், கட்டிடம் – இவற்றின் அழகைக் கண்டு பெறுகிற இன்பம் காட்சி இன்பமாகும்.

**(ஈ) ரஸம் (சுவை):–**

இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கசப்பு, கார்ப்பு என்ற அறுவகை ரஸம் உள்ள பொருள்களைச் சுவைப்பதினால் ஏற்படுகின்ற இன்பம் சுவை இன்பமாகும்.

**(உ) கந்தம் (மணம்):–**

மூக்கினால் அத்தர், தைலம், பொடி, பூ முதலியவற்றை முகர்ந்து நாம் பெறும் இன்பம் மண இன்பமாகும். வெங்காயம், பூண்டு முதலியவற்றின் மாறுபட்ட மணத்தினாலும் சுகம் ஏற்பட்டால், அதுவும் மண சுகம்தான்.

**(ஊ) மானம் (மரியாதை):–**

நம்முடைய உடலுக்குக் கிடைக்கின்ற மரியாதை, வரவேற்பு ஆகியவற்றால் ஏற்படுகின்ற சுகம், மானத்தால் (பாராட்டால்) ஏற்படுகின்ற சுகம்.

**(எ) பெருமை:–**

புகழ்வதனால் அல்லது மற்றவர் 'சபாஷ்' என்று கை தட்டுவதால் ஏற்படுகின்ற இன்பம் பெருமை தரும் இன்பமாகும்.

**(ஏ) வசதி (நிம்மதியான நிலை):–**

உடலுக்கு உழைப்பின்றி நிம்மதியாக (படுத்து)க் கிடப்பதில் ஏற்படுகின்ற இன்பம் நிம்மதி இன்பமாகும்.

**4. மோட்சம் (வீடு):–**

ஆத்ம சாட்சாத்காரம் (ஆத்ம தரிசனம்) தத்துவஞானம், ஆன்மிக சுகம், நற்கதி அடைதல், முக்தி, ஈசுவர தரிசனம், பகவானிடத்தில் அன்பு – இவையெல்லாம் மோட்சத்தின் மறு பெயர்களே.

அறம், பொருள், இன்பம், வீடு – இவைகளில் கவனித்தோமானால், பொருளும் தர்மமும் ஒன்று மற்றொன்றை அதிகரிக்கச் செய்கிறது. அதாவது, பொருளினால் தர்மம் வளரும். தர்மத்தினால் பொருள் சேரும். ஆனால், தர்மத்தைக் காமத்தை அடையக் காப்பாற்றினோமானால், அந்த தர்மம் விரும்பியதைத் தந்துவிட்டு அழிந்துவிடும். பொருளும்

'காமனா பூர்த்திக்காக' செலவழிக்கப்படுமானால், அந்தப் பொருளும் விரும்பியதைத் தந்துவிட்டு அழிந்துவிடும். இதிலிருந்து விளங்குவது என்னவென்றால் காமமானது தர்மம், அர்த்தம் இரண்டையும் விழுங்கிவிடும். அதனால்தான் கீதையில் பகவான் கண்ணன், காமத்தை 'பெருந்தீனிக்காரன்' என்று கூறுகிறார். தர்மத்தினுடைய அனுஷ்டானம் காமத்தை விட்டுவிட்டுச் செய்யப்படுமானால், அது அந்தக்கரணங்களைச் சுத்தம் செய்து விடுதலை தந்துவிடும். இதேபோல பணத்தை மற்றும் காமத்தை (சுயநலத்தை) விட்டுவிட்டு, பிறர் உதவிக்காக, பிறர் நலனுக்காக, பிறருக்கு இன்பம் தரச் செலவழிக்கப்படுமானால், அதுவும் அந்தக்கரணங்களைத் தூய்மையாக்கி விடுதலை பெற்றுத் தரும்.

அறம், பொருள், இன்பம், வீடு – இவைகளில் பொருளும் போகமும் பெறுவதில் பிராரப்தம் பெரும் பங்கு வகிக்கிறது. புருஷார்த்தமோ (மனித முயற்சியோ) சிறுபகுதிதான் வகிக்கிறது. தர்மத்திலும் மோட்சத்திலும் புருஷார்த்தத்திற்கு அதிக முக்கியத்துவம் உண்டு; பிராரப்தத்திற்குக் குறைந்த முக்கியத்துவமே உண்டு. பிராரப்தம், புருஷார்த்தம் – இவைகளின் களன்கள் தனித்தனியானவை. அந்தந்த இடத்தில் இரண்டுக்கும் முக்கியத்துவம் உண்டு. இதைத்தான் பின்வரும் சுலோகம் கூறுகிறது—

***ஸந்தோஷஸ்த்ரிஷு கர்தவ்ய: ஸ்வ***தாரே போஜநே தநே ।
***த்ரிஷு*** சைவ ந ***கர்தவ்ய: ஸ்வாத்***யாயே ஜபதாநயோ***:*** ॥

**இதன் பொருள்:–** மனைவி, மக்கள், பரிவாரம், உணவு, சொத்து – இவைகளின் விஷயத்தில் சீக்கிரம் மனத்தில் நிறைவு கொள்ளவேண்டும். ஆனால் படிப்பு, பூஜை, ஸ்தோத்திரம், நாமஜபம், கீர்த்தனம், தானம் முதலிய விஷயங்களில் ஒருபோதும் சந்தோஷம், (திருப்தி அல்லது) நிறைவு அடையக்கூடாது. அதாவது பிராரப்தத்தின் பயனான சொத்திலும் சுகத்திலும் திருப்தி ஏற்பட்டுவிட வேண்டும். ஏனென்றால், பிராரப்தப்படிதான் அவை கிடைக்கும். அதற்கு மேல் என்ன முயன்றாலும் கிடைக்காது. ஆனால்,

தர்மானுஷ்டானத்தில் நம்முடைய நன்மை இருக்கிறது. அதைச் செய்வதில் திருப்தி அடைந்துவிடக் கூடாது. ஏனென்றால், இதை செய்யத்தான் மனித உடல் கிடைத்திருக்கிறது.

கர்மங்கள் இரண்டு வகைப்படும். 1. சுபம் அதாவது புண்ணியம். 2. அசுபம் அதாவது பாவம். சுப கர்மத்தின் பயன் சுகம் தரக்கூடிய சூழ்நிலையாகும். அசுப கர்மத்தின் பயனாக துயர் தரும் சூழ்நிலை விளையும். கர்மங்கள் புறத்தே செய்யப்படுபவை. அவற்றின் பயனும் புறத்தே உள்ள சூழ்நிலையின் உருவத்தில்தான் வந்து கிட்டும். ஆனால், அந்தச் சூழ்நிலைகளின் காரணமாக பெறப்படும் இன்பமோ, துன்பமோ அகத்து அனுபவமாகும். எனவே, சூழ்நிலைகளில் இன்பத்தையோ, துன்பத்தையோ பெறுவது, அந்தக் கர்மங்களின் பயன் அல்ல. அதாவது, பிராரப்தம் சூழ்நிலையைத்தான் கொடுக்கும். இன்பமோ, துன்பமோ உணர்வது மனிதனுடைய முட்டாள்தனத்தின் பயன்.

***யத்பாவி தத்பவத்யே யதபாவ்யம் ந தத்பவேத் ।***
***இதி நிச்சித புத்தீநாம ந சிந்தா பாததே க்வசித் ॥***
***(நாரத புராணம், பூர்வ. 37/47)***

"எது நடக்க வேண்டுமோ, அது நடந்தே தீரும். நடக்கக் கூடாதது ஒருக்காலும் நடவாது. யாருடைய புத்தியில் இந்த உறுதி ஏற்பட்டுவிடுகிறதோ, அவர்களுக்கு ஒருபோதும் கவலை அல்லது வருத்தம் ஏற்படுவது இல்லை."

பகவான் மேல் அல்லது பிராரப்தத்தின் மேல் நம்பிக்கை ஏற்பட்டுவிட்டால், மிகமிக துன்பம் தரும் சூழ்நிலை வந்தாலும்கூட, சித்தத்தில் இனிமையே இருக்கும்; மகிழ்ச்சியே இருக்கும்.

***லாலநே தாடநே மாதுர்நாகாருண்யம் யதார்பகே ।***
***தத்வதேவ மஹேசஸ்ய நியந்துர்குணதோஷயோ: ॥***

குழந்தையைத் தாலாட்டுவது, அடிப்பது இரண்டிலுமே தாயின் அன்பின்மை என்பது இல்லை. அதேபோல் உயிர்களின் குணதோஷங்களைக் கட்டுப்படுத்துகிற பரமேசுவரனுக்கும்

யாரிடமும் அன்பின்மை (அக்ருபா) என்பது கிடையாது. இதை நினைவில் கொண்டால், துன்பம் தரும் சூழ்நிலையில் பாவம் குறைகிறது என்று அறிந்து, மேலே பாவம் செய்யாதிருக்கக் கவனமாக இருப்போம். பாவம் தொலைந்தால் அந்தக்கரணம் தூய்மை பெறும்.

சாதகன் இன்பமான அல்லது துன்பம் தரவல்ல சூழ்நிலையை நல்லமுறையில் பயன் கொள்ள வேண்டும்; கெடுதலுக்குப் பயன்படுத்தக் கூடாது. இன்பச்சூழ்நிலை வந்தால், அப்பொழுது அனுகூலமான பொருட்களை மற்றவர் நலனுக்காகச் சேவை உள்ளத்துடன் செலவிட்டால், அது இன்பச் சூழ்நிலையின் நல்ல உபயோகமாகும். ஆனால், அதைத் தன் இன்பத்திற்காகச் சுகித்தல் தீய உபயோகமாகும். அதேபோல், துன்பம் தரவல்ல சூழ்நிலை ஏற்பட்டால், இன்பத்தின் விருப்பத்தைத் தியாகம் செய்துவிட்டு, என் பாவங்கள் நசிப்பதற்காகவும், மேலும் பாவம் செய்யாமல் கவனமாக இருப்பதற்காகவுமே, அதாவது, ‘என்னுடைய முன்னேற்றத்திற்காகவே இந்த நிலை வந்திருக்கிறது’ என்ற எண்ணத்துடன் சித்தத்தை இனிமையாக வைத்துக் கொள்ளுதல், துன்பச் சூழ்நிலையின் நல்ல உபயோகமாகும். அதற்காக வருந்துவது தீய வகையில் பயன் கொள்வதாகும்.

மனிதச் சரீரம் சுக–துக்கத்தை அனுபவிக்க (துய்க்க) ஏற்பட்டதல்ல. சுகத்தை அனுபவிப்பதற்கான இடம் சுவர்க்கம் (துறக்கம்) போன்றவை. துக்கம் அனுபவிக்கும் இடம் நரகமும், எண்பத்து நான்கு லட்ச யோனிகளும் ஆகும். அவை போக இடங்கள். ஆனால் மனிதப்பிறவி, ‘கர்ம யோனி’. ஆனால், எவர் மனிதச் சரீரம் எடுத்தும் கவனம் செலுத்தாமல் பிறப்பு–இறப்பு வட்டத்திற்குள்ளேயே சுழன்று கொண்டிருக்கிறார்களோ, அவர்களுக்கு இது கர்ம யோனி. அதாவது, பாவ–புண்ணியங்களைக் கழித்துவிட்டு, முக்தி அடைய முயல உதவும் பிறவியாவதில்லை. உண்மையில் இந்த உடல், சுக–துக்கத்தை மீறிச் சென்று முக்திநிலையை

அடைவதற்காகவே ஏற்பட்டது. இதை 'கர்ம யோனி' என்று கூறாமல், 'சாதன யோனி' என்றே கூற வேண்டும்.

பிராரப்தக் கர்மங்களின் பயனாக வருகின்ற இன்ப–துன்ப சூழ்நிலைகள் இரண்டிலுமே சுகம் தரும் சூழ்நிலையை ஸ்வரூபமாகவே (அப்படியே) விட்டுவிட மனிதனுக்குச் சுதந்திரம் உண்டு. ஆனால், துக்கம் தரும் சூழ்நிலையை விட்டுவிடுவதில் அவனுக்குச் சுதந்திரம் கிடையாது. அதற்குக் காரணம், சுகம் தரும் சூழ்நிலை பிறருக்கு உதவுவதனால் அல்லது இன்பம் தந்ததனால் வந்த விளைவு. ஆனால், துன்பச் சூழ்நிலையோ பிறருக்குத் துன்பம் தந்ததனால் வந்த விளைவு. ஓர் எடுத்துக்காட்டின் மூலம் இதை விளக்குவோம்.

சியாமலால் என்பவன் ராமலால் என்பவனுக்கு ஆயிரம் ரூபாய் கடன் கொடுத்தான். ராமலால் ஒரு மாதத்தைக் குறித்து, இத்தொகையை வட்டியுடன் திருப்பிக் கொடுப்பேன் என்று உறுதி அளித்தான். மாதம் கழிந்தது. ராமலால் கடனைத் திருப்பித் தரவில்லை. சியாமலால் ராமலாலிடம் சென்று, ''சொன்னபடி தரவில்லையே, இப்பொழுது கொடு'' என்றான். ராமலால், ''இப்பொழுது இல்லை, நாளை மறுநாள் வா'' என்றான். சியாமலாலும் மூன்றாம் நாள் சென்றான். பணத்தைக் கேட்டான். அப்பொழுதும் ராமலால், ''பணம் கிடைக்கவில்லை. நாளை மறுநாள் வா'' என்றான். மீண்டும் மூன்றாவது நாள் சியாமலால் சென்று, ''பணத்தைக் கொடு'' என்று கேட்டான். ராமலால், ''நாளைக்குக் கண்டிப்பாகத் தருவேன்'' என்றான். சியாமலால் மறுநாளும் சென்றான். அப்பொழுது ராமலால் சொன்னான்— ''என்னிடம் பணம் இல்லையே, நான் எப்படிக் கொடுப்பேன்? நாளை மறுநாள் வா.'' சியாமலாலுக்குக் கோபம் வந்துவிட்டது. ''நாளை மறுநாள், நாளை மறுநாள் என்கிறாய், கொடுக்கிற வழியாக இல்லை'' என்று சொல்லிக் கொண்டே, ராமலாலைச் செருப்பால் ஐந்து அடிகள் அடித்துவிட்டான். ராமலால் நீதிமன்றத்திற்குச் சென்று பிராது கொடுத்தான். நீதிபதி

சியாமலாலை அழைத்து, ''நீ, ராமலால் வீட்டிற்குச் சென்று, அவனைச் செருப்பால் அடித்தாயா?'' என்று கேட்டார். சியாமலால், ''ஆமாம், அடித்தேன்'' என்றான். நீதிபதி, ''ஏன் அடித்தாய்?'' என்று கேட்டார்.

சியாமலால் பின்வருமாறு சொன்னான்— ''இவன் என்னிடம் பணம் வாங்கியிருந்தான். குறிப்பிட்ட ஒரு மாதத்திற்குள் கொடுப்பதாகச் சொன்னான். சென்று கேட்டபொழுது 'நாளை, நாளை மறுநாள்' என்று சொல்லியே, எனக்கு எரிச்சல் மூட்டினான். கோபம் வந்தது. ஐந்து செருப்படி அடித்துவிட்டேன். துரையே! இந்த ஐந்து அடிக்கு ஐந்து ரூபாய்களைக் கழித்துக் கொண்டு மிச்சப் பணத்தைக் கொடுக்கும்படி உத்தரவிடுங்கள்.'' நீதிபதி சிரித்துக் கொண்டே சொன்னார்— ''இது குற்றவியல் நீதி மன்றம். இங்கே பணம் கொடுப்பதெல்லாம் சொல்ல முடியாது. தண்டனை கொடுக்கத்தான் இந்த நீதிமன்றம். நீ, அவனைச் செருப்பால் அடித்ததற்குப் பதிலாக சிறைப்பட வேண்டும் அல்லது அபராதம் கட்ட வேண்டும். பணம் வேண்டும் என்றால் உரிமையியல் நீதிமன்றத்திற்குப் போ. அந்த இலாகா தனியானது. அங்கே உனக்குப் பணம் கிடைக்கலாம்.''

அசுப கர்மங்களின் பலனான துன்பச் சூழ்நிலை 'குற்றவியல் மன்றம்'. இதனால், அதை ஸ்வரூபத்துடன் விட்டுவிட முடியாது. சுப கர்மங்களின் (புண்ணியங்களின்) பயன், இன்பச் சூழ்நிலை. அது உரிமையியல் விஷயம். அதனால், அதை ஸ்வரூபத்துடன் விட்டுவிட முடியும்.

இதிலிருந்து மனிதனுடைய பாவ–புண்ணியங்களின் இலாக்காக்கள் தனித்தனி என்பது உறுதியாகிறது. சுப கர்மங்கள் (புண்ணியங்கள்), அசுப கர்மங்கள் இரண்டும் தனித்தனியாகச் சேருகின்றன. ஒன்று, மற்றொன்றை இல்லாமல் ஆக்க முடியாது. அதாவது பாவங்கள், புண்ணியங்களைக் குறைக்க முடியாது. புண்ணியங்கள், பாவங்களை ஒதுக்க முடியாது.

உலகத்தில் புண்ணியாத்மாவாகவும் நன்னடத்தைக் கொண்டவனாகவும் இருக்கின்ற ஒருவன் துக்கம் அடைகிறான். ஆனால், கெட்ட நடத்தை உள்ள ஒரு பாவி சுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறான். இந்த விஷயத்தை எடுத்துக் கொண்டு நல்லவர்கள் இடையேயும்கூட, 'இங்கே ஈசுவர நியாயம் எங்கே இருக்கிறது?' என்ற சந்தேகம் எழுகிறது.

மகாபாரதத்தில் ஒரு கதை வருகிறது. ஒரு நாள் திரௌபதி யுதிஷ்டிரரிடம் பின்வருமாறு கேட்டாள்— ''தாங்கள் ஓர் அடிகூடத் தர்மத்திற்கு விரோதமாக நடப்பதில்லை. தாங்கள் காட்டிலிருந்து சங்கடப்படுகிறீர்கள். துரியோதனனோ தர்மத்தைப் பற்றிச் சிறிதுகூட எண்ணுவதில்லை. சுயநலமே கொண்டு திரிகிறான். அவன் அரசாளுகிறான், சுக போகங்களை அனுபவிக்கிறான். இது எப்படி?'' இதற்கு யுதிஷ்டிரர் பின்வருமாறு விடையிறுத்தார்— ''எவன் சுகம் பெறும் நோக்கத்தோடு தர்மத்தைக் காக்கிறானோ, அவன் தர்மத்தின் உண்மையை அறிய மாட்டான். அவன் மிருகத்தைப் போல சுகபோகத்தில் ஆசை கொண்டு துக்கத்திற்கு அஞ்சுகிறான். அவன் தர்மத்தின் தத்துவத்தை எப்படி அறிவான்? மனிதனின் மனிதத்தன்மையே, சுகமோ, துக்கமோ எதையும் குறியாகக் கொள்ளாமல், சாஸ்திர விதிப்படித் தன்னுடைய தர்மத்தை அதாவது கடமையைச் செய்து கொண்டு இருப்பதில்தான் இருக்கிறது.''

ஈசுவர நியாயத்தில் ஐயம் கொண்டவர்களுக்குச் சமாதானம் இதுதான். **இப்பொழுது துக்கத்தை அனுபவிக்கின்ற புண்ணியாத்மா, முற்பிறவியில் செய்த பாவத்தின் பயனை அனுபவிக்கிறான். இப்பொழுது செய்கின்ற புண்ணியத்தின் பயன் அல்ல அது. அவ்விதமே பாவம் செய்பவன் அனுபவிக்கின்ற சுகம், முற்பிறவியில் செய்த புண்ணியத்தின் பயனே. இந்தப் பிறவியில் செய்கின்ற பாவத்தின் பயன் அல்ல.**

இங்கே இன்னும் ஒரு தத்துவப் பொருள் இருக்கிறது. 'கர்மங்களின் பயனாக அனுகூலமாக வருகிற சூழ்நிலையில்

சுகமே ஏற்படும்; பிரதிகூலமான சூழ்நிலையில் துக்கத்தையே தரும்' என்பதும் உண்மையல்ல. அனுகூலநிலை வந்தால் மனத்தில் கர்வம் ஏற்படுகிறது. கீழ்நிலையில் உள்ளவர்களை வெறுக்கிறான்; தன்னைவிட வசதி கொண்டவர்களைப் பார்த்து பொறாமைப்படுகிறான்; வெறுப்பு கொள்கிறான். சித்தத்தில் எரிச்சல், மனத்தில் கெட்ட எண்ணங்கள் ஏற்படுகின்றன. மற்றவரின் சொத்து எப்படியாவது நஷ்டமாக வேண்டும்; மற்றவரை அவமானப்படுத்த வேண்டும் என்ற முயற்சியும் செய்கிறான். இவ்விதம் சுகத்திற்கும் சந்தோஷத்திற்கும் உரிய சொத்து—சுகம் போன்ற வசதிகள் இருந்தும், அவன் சுகமாக இருக்க மாட்டான். ஆனால், வெளியேயிருந்து பார்ப்பவர்கள் அவன் மிகுந்த சுகமாக இருப்பதாக எண்ணிப் பிரமை கொள்வார்கள்.

இவ்விதமே தியாக உணர்வும், பற்றற்ற நிலையும் கொண்ட ஒரு மனிதனைப் பார்த்து வசதியுள்ள மனிதன் இரக்கம் காட்டுகிறான். 'பாவம் அவன் கஷ்டப்படுகிறானே' என்று எண்ணுகிறான். உண்மையில், இந்தத் தியாகியின் மனத்தில் இருக்கின்ற அமைதியும் சந்தோஷமும் பணக்காரன் எவன் மனத்திலும் இருக்க முடியாது. அதனால், பணமே சுகம் என்பதில்லை. பணம் இல்லாததே கஷ்டம் என்பதுமில்லை. ***இன்பம் அல்லது சுகம், இதயத்தின் அமைதியையும் மகிழ்ச்சியையும் பொருத்தது. இதயத்தில் எரிச்சலும் தாபமும் இருக்குமானால் அதுதான் துக்கம்.***

புண்ணியத்தையும் பாவத்தையும் அனுபவிப்பதில் ஒரே வகையான விதியில்லை. புண்ணியத்தை நிஷ்காம எண்ணத்துடன் பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிட்டால், அது முடிந்துவிடலாம். ஆனால், பாவமோ பகவானுக்கு அர்ப்பணம் செய்தாலும் முடியாது. பாவத்தின் பயனை அனுபவித்தே தீரவேண்டும். பகவான் ஒத்துக்கொள்ளாத காரியம்தானே பாவம். அதையே அவருக்கு எப்படி அர்ப்பணம் செய்ய முடியும்? அது எப்படி அர்ப்பணமாகும்? உண்மையில், பகவானுடைய ஆணைப்படி செய்கின்ற காரியங்களை,

பகவானுக்கு அர்ப்பணமாக்க முடியும். இதை விளக்க ஒரு கதை உண்டு.

அரசன் ஒருவன், தன் குடிமக்களுடன் ஹரித்துவாரம் சென்றான். அதில் பல இன மக்கள் இருந்தனர். அவர்களிடையே ஒரு கீழ்சாதிக்காரனும் இருந்தான். அவன் எண்ணினான்— 'இந்த வியாபாரிகள் பெரிய கெட்டிக்காரர்கள். தங்கள் புத்திசாலித்தனத்தினால் பணக்காரர்களாகியிருக்கிறார்கள். நாமும் அவர்கள் புத்திசாலித்தனத்தைப் பின்பற்றினோமானால் நாமும் பணக்காரனாகலாம்.' இப்படி எண்ணி, அவன் ஒரு கெட்டிக்கார வியாபாரியினுடைய செயல்களைக் கவனித்துக் கொண்டே இருந்தான். ஹரித்துவாரத்தில் பிரம்ம குண்டத்தில் புரோகிதர் ஒருவர் தான புண்ணியத்திற்கான சங்கல்பம் செய்து வைத்து கொண்டிருந்தார். அப்பொழுது வியாபாரி, ''நான், ஓர் அந்தணருக்கு நூறு ரூபாய் கடன் கொடுத்தேன். இன்று நான் தான ரூபமாக, அந்த ரூபாயைக் கிருஷ்ணார்ப்பணம் செய்கிறேன்'' என்று கூற, அந்த புரோகிதரும் சங்கல்பம் செய்வித்தார். இச்செய்கையைக் கீழ்சாதிக்காரன் பார்த்தான். 'இவன் (வியாபாரி) ஒரு காசுகூடக் கொடுக்காமல் தானம் கொடுத்துவிட்டதாகப் புகழ் பெறுகிறான். நான், இந்த வியாபாரிக்குக் குறைந்தவனல்ல' என்று எண்ணி, தனக்கும் புரோகிதரிடம் சங்கல்பம் செய்விக்கச் சொன்னான். புரோகிதர், அந்தக் கீழ்சாதியனுக்குச் சங்கல்பம் செய்விக்கத் தொடங்கினார். கீழ்சாதியன் சொன்னான்— ''ஒரு வியாபாரி, எனக்கு நூறு ரூபாய் கடன் கொடுத்தான். அதை நான் இன்று கிருஷ்ணார்ப்பணம் செய்கிறேன்.'' அவன் சொன்னது புரோகிதருக்கு முழுவதும் புரியவில்லை. இருந்தாலும் அப்படியே சங்கல்பம் செய்து வைத்துவிட்டார். கீழ்சாதிக்காரனுக்கு ஒரே சந்தோஷம். 'நானும் அந்த வியாபாரியைப் போல நூறு ரூபாய் தானம் செய்து புண்ணியத்தை அடைந்துவிட்டேன்' என்று.

எல்லோரும் ஊருக்குத் திரும்பினார்கள். தக்க சமயத்தில் உழவுத்தொழில் நடந்தது. வியாபாரியிடம் கடன் வாங்கிய

பிராமணனுடைய வயலிலும், கீழ்சாதிக்காரன் வயலிலும் நல்ல விளைச்சல் ஏற்பட்டது. பிராமணன் வியாபாரியிடம், ''ஐயா! நீங்கள் விரும்பினால் நூறு ரூபாய்க்கு உள்ள தானியத்தை எடுத்துக் கொள்ளுங்கள். இதனால் உங்களுக்கும் லாபம் ஏற்படும்; எனக்கும் கடன் தீரும்'' என்று கூறினான். அதற்கு வியாபாரி, ''அந்தணரே! நான் ஹரித்துவாரம் சென்றிருந்தபோது, உங்களுக்குக் கொடுத்தக் கடனை தானம் என்று சொல்லிவிட்டேன்'' என்று கூறினான். பிராமணனோ, ''நான் வாங்கியது கடன்தான். வட்டியுடன் திருப்பிக் கொடுக்க விரும்புகிறேன்'' என்றான். அதற்கு வியாபாரி சொன்னார்— ''தாங்கள் கடனைத் திருப்பிக் கொடுத்துத்தான் ஆக வேண்டுமென்றால், உங்களுடைய சகோதரிக்கோ, பெண்ணுக்கோ கொடுத்துவிடுங்கள். நான், பகவானுக்காக அர்ப்பணம் செய்த பணத்தை எப்படி வாங்கிக் கொள்ள முடியும்?'' பிராமணன் செய்வதறியாது நின்றான். பின்னர் தன் வீட்டிற்குப் போய்விட்டான்.

இப்பொழுது, கீழ்சாதிக்காரன் யாரிடம் நூறு ரூபாய் வாங்கியிருந்தானோ, அந்த வியாபாரி, கீழ்சாதிக்காரன் வயலுக்கு வந்து, ''என் கடனைத் திருப்பிக் கொடு, நெல்லாக வேண்டுமானாலும் கொடு'' என்றான். பிராமணன் கொடுத்த போதும் வியாபாரி வாங்கிக் கொள்ளவில்லை என்ற சம்பவத்தைக் கீழ்சாதிக்காரன் கேள்விபட்டிருந்தான். அதனால் அவன், 'நான் வியாபாரியிடம் வாங்கிய கடனைப் புரோகிதர் மூலமாக சங்கல்பம் செய்துவிட்டேனே. ஆகவே, நான் வாங்கிய கடனை எதற்காகத் திருப்பிக் கொடுக்க வேண்டும்?' என்றெண்ணி வியாபாரியிடம், ''நான் ஹரித்துவாருக்கு வந்த வியாபாரியைப் போல கங்கை நீரில் நின்று, நான் கடனாக வாங்கிய பணத்தை கிருஷ்ணார்ப்பணம் செய்துவிட்டேன். ஆகவே, நான் எதற்கு கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டும்?'' என்று கேட்டான். வியாபாரி சொன்னான்— ''நீ அர்ப்பணம் செய்துவிட்டதனால் (வாங்கிய) கடன் தீர்ந்து விடாது. ஏனெனில், நீ என்னிடம் கடன் வாங்கியுள்ளாய். நீ

கிருஷ்ணார்ப்பணம் செய்துவிட்டேன் என்று சொன்னால் அதற்கு என்ன பொருள்? என்னுடைய முழுப்பணத்தையும் வட்டி சேர்த்து வாங்கியே தீருவேன்'' என்று சொல்லி, தன்னுடைய பணத்திற்குரிய நெல்லை எடுத்துக் கொண்டு சென்றான்.

இந்தக் கதையிலிருந்து, நாம் கொடுக்க வேண்டிய கடனைக் கிருஷ்ணார்ப்பணம் என்று கூறித் தப்பித்துக் கொள்ள முடியாது. இவ்விதமே பகவானின் ஆணைப்படிச் செய்யப்படுகின்ற நல்ல கர்மங்களை, அவருக்கு அர்ப்பணம் செய்ய முடியும். அர்ப்பணம் செய்வதனால் பந்தமும் தீரும். ஆனால், அசுப கர்மங்களின் பயனை அனுபவித்தே ஆகவேண்டும். இந்தக் கதையிலிருந்து புண்ணியங்களுக்கு ஒரு விதி என்றும், பாவங்களுக்கு ஒரு விதி என்றும் புரிகிறது. பகவானுக்கு அர்ப்பணம் செய்தால் கடனோ, பாவமோ தீர்ந்துவிடும் என்ற ஒரு விதி இருக்குமானால், எல்லா உயிர்களுமே முக்தி அடைந்துவிடலாம். ஆனால், இது அவ்விதம் நடக்காது. ஆம், இதில் மிகவும் ஆழமான ஒரு தத்துவம் இருக்கிறது. பகவானிடத்தில் முழுமையாக நம்மை அர்ப்பணம் செய்து கொண்டோமானால், அதாவது, அவனுடைய சரணங்களை முழுமையாக அடைந்துவிட்டோமானால், பாவம்–புண்ணியம் இரண்டுமே அழிந்துவிடும். ஸ்ரீமத் பகவத்கீதை 18/66–ல் பகவான் கூறுகிறார்—

***ஸர்வத$_4$ர்மாந்பரித்யஜ்ய***
***மாமேகம் ஶரணம் வ்ரஜ ।***
***அஹம் த்வா ஸர்வபாபேப்$_4$யோ***
***மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥***

''தர்மங்கள் அனைத்தையும் அதாவது செய்யவேண்டிய கடமைகள் அனைத்தையும் என்னிடம் அர்ப்பணம் செய்துவிட்டு, சர்வ வல்லமை பொருந்திய, எல்லாவற்றிற்கும் ஆதாரமான, பரமேசுவரனான என் ஒருவனையே சரணடைவாயாக! நான் உன்னைப் பாவங்கள் அனைத்திலிருந்தும் விடுவிப்பேன், வருந்தாதே!''

ஸ்ரீமத் பாகவத்திலும் ஒரு சுலோகம் வருகிறது. அது பின்வருமாறு—

**தே₃வர்ஷிபூ₄தாப்தந்ருணாம் பித்ரூணாம்**
**ந கிங்கரோ நாயம்ருணீ ச ராஜந் ।**
**ஸர்வாத்மநா ய: ஶரணம் ஶரண்யம்**
**க₃தோ முகுந்த₃ம் பரிஹ்ருத்ய கர்தம் ॥**
**(ஸ்ரீமத் பாகவதம் *11/5/41*)**

''அரசே! அடைக்கலம் அடையத்தக்கவரான பகவான் முகுந்தனை, எல்லா வகையாலும் சரணடைந்துவிட்டவர் தேவ–ரிஷி–பித்ரு கடன்களிலிருந்தும், அதிதி பூஜை–பூதபலி முதலிய சடங்குகளிலிருந்தும் விடுதலை பெற்றுவிடுகிறார். இவர் (பகவானைத் தவிர, வேறு எவருக்கும்) அடிமை அல்லர்; கடனாளி அல்லர். கர்மவாஸனையிலிருந்தும் கர்மத்தளையிலிருந்தும் வெளியேறிவிடுகிறார்.''

மற்றொரு ஐயமும் எழலாம். சுகமும் சௌக்கியமும் பிராரப்தக் கர்மத்தின் பயனாக ஏற்படுகிறது என்கிறார்கள். இது நமக்கு விளங்குவது இல்லை. வருமான வரி, வியாபார வரி முதலியவற்றைக் கொடுக்காமல் இருந்தால் பணம் மிஞ்சுகிறது. வரியைக் கட்டினால் பணம் போய்விடுகிறது. இப்பொழுது பணம் போவதும் வருவதும் பிராரப்தத்தினால் ஏற்பட்டதா? இது திருட்டுக்கல்லவா கட்டுப்பட்டிருக்கிறது.

இதற்குச் சமாதானம் பின்வருமாறு இருக்கிறது. உள்ளபடி பணம் பெறுவதும், போகங்கள் அனுபவிப்பதும் பிராரப்தத்தையே முக்கியமானதாகக் கொண்டிருக்கின்றன. ஆனால், இவ்விரண்டில் சிலருக்கு பணத்தைச் சம்பாதிப்பதில் பிராரப்தம் பங்கு வகிக்கிறது. ஆனால், அவர்களுக்குத் துய்க்க அதிர்ஷ்டம் (பிராரப்தம்) இருப்பதில்லை. சிலருக்கு பிராரப்தத்தின் காரணமாக இரண்டுமே கிடைக்கின்றன. பணம் அடையும் பிராரப்தமுள்ளவனிடம் லட்சக்கணக்கான ரூபாய் சேர்ந்திருக்கலாம். ஆனால், வியாதி இருக்கும். வைத்தியர்கள் தடுப்பார்கள். போகங்களை அனுபவிக்க முடியாது. அவனுக்குச்

சுவையில்லாத உணவுகளே சாப்பிட வேண்டியிருக்கும். பணத்திற்கு அதிர்ஷ்டம் உள்ளவன், பணம் இல்லாது போனாலும்கூட போகங்களில் ஒரு குறைவும் இருக்காது.

எல்லாவற்றையும் விட்டவனுக்குக்கூட பிரியமான பொருட்கள் கிடைப்பதைப் பார்க்கிறோம். அவன் அவற்றை ஏற்றுக்கொள்ள மாட்டான். அது வேறு விஷயம். தியாகத்தில் ஒரு விசித்திரமான நிலை என்னவென்றால், பணத்தைப் பெரிதாக எண்ணாதவன், பணத்திற்கு எந்தவிதத்திலும் அடிமையாக மாட்டான். அவனுக்குப் பணம் ஒரு புதிய பிராரப்தமாகி விடுகிறது. ஏனெனில், தியாகம் என்பது புண்ணியச் செயல். அது உடனே பிராரப்தமாக மாறிவிடும் தன்மை கொண்டிருக்கிறது.

***தாந நஹீ(ம்) தீணோ(ம்) நஹீ(ம்) ருபையோ ரோக் ।***
***ஜிமண பைட்யா ராமதாஸ் ஆந மிலை ஸப் தோக் ॥***

ராமதாஸ் என்ற பக்தர் கூறுகிறார்— ''தானியமும் இல்லை; மற்ற பொருளும் இல்லை; வாங்கலாம் என்றால் காசும் இல்லை. ஆனால், ராமதாஸ் சாப்பிட உட்கார்ந்தால், எல்லாம் மொத்தமாக வந்து சேருகிறது!'' ***'தீணோ(ம்)'*** என்ற சொல்லுக்குச் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது.

மேலே நான் கூறிய போகம் சம்மந்தப்பட்ட அதிர்ஷ்டக்காரனுக்கு மற்றவர்கள் தயவினால், நண்பர்களின் உதவியினால் வேலை கிடைத்துவிடலாம். பிராரப்தத்திற்குத் தக்கபடி வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள் கிடைத்துக் கொண்டிருக்கும்.

பணத்திற்குக் கொடுப்பினை (அதிர்ஷ்டம்) இல்லை என்றால் திருட போனாலும் பணம் கிடைக்காது. மேலும், திருட்டு வெளியாகி இருக்கிற பணமும் போய் தண்டனையும் கிடைக்கும். தண்டனை இங்கு கிடைக்கிறதோ, இல்லையோ, பரலோகத்தில் கண்டிப்பாய் கிடைக்கும். அதிலிருந்து அவன் தப்பவே முடியாது. பிராரப்தத்தின் காரணமாக பணம்

கிடைத்தாலும்கூட, அதை அவன் அனுபவிக்க முடியாது. வியாதி, திருட்டு, கொள்ளை, வழக்கு என்று எந்த வகையிலாவது அந்த பணம் போய்விடும். மொத்தமாக கருத்து என்னவென்றால், பணம் எத்தனை நாட்கள் வரை இருக்க வேண்டும் என்று விதி நிர்ணயித்திருக்குமோ, அவ்வளவு நாட்களே தங்கி இருக்கும். பிறகு அழிந்துவிடும். அது மட்டுமல்ல, வருமான வரி முதலியவற்றில் திருட்டுத்தனம் செய்வதால், மனத்தில் ஏற்படுகிற ஸம்ஸ்காரங்கள் பல பிறவிகளில் அவனைத் திருடத் தூண்டிக் கொண்டே இருக்கும். அவன் அதன் காரணமாக தண்டனைப் பெற்றுக் கொண்டேயிருப்பான்.

பணத்திற்குக் கொடுப்பினையிருந்தால் அவனை யாராவது தத்து எடுத்துக் கொள்வார்கள் அல்லது மரணம் நெருங்கிக் கொண்டிருக்கும் பணக்காரன் ஒருவன், அவன் பெயரில் தன் சொத்தை எழுதி வைத்துவிட்டு இறந்துவிடுவான். அல்லது, அவன் பூமியைத் தோண்டுவான்; அங்கே அவனுக்குப் புதையல் கிடைக்கும். இவ்விதம் பிராரப்தத்தின் பயனாக, எந்தப் பணம் கிடைக்க வேண்டுமோ, அது எந்த வகையிலாவது கிடைத்துவிடும்.

***ப்ராப்தவ்யமர்(த்)தம் லபதே மநுஷ்யோ***
***தைவோऽபி தம் லங்கயிதும் ந சக்த: ।***
***தஸ்மாந்ந சோசாமி ந விஸ்மயோ மே***
***யதஸ்மதீயம் ந ஹி தத்பரேஷாம் ॥***

''கிடைக்க விதிக்கப்பட்ட பொருள் மனிதனுக்குக் கிடைத்தே தீரும். கடவுளும் அதைத் தடுக்க முடியாது. இதனால் நான் வருந்துவதில்லை, வியப்பதுமில்லை. எனக்கு என்று ஏற்பட்டது பிறருடையதாக ஆகாது.''

ஆனால் மனிதன், பிராரப்தத்தையும் நம்புவதில்லை. புருஷார்த்தத்தை (மனித முயற்சியை) நம்பி உழைத்துச் சாப்பிடுவோம் என்றும் எண்ணுவதில்லை. அதனால்தான் அவனுக்குத் திருடுதல் போன்ற கெட்ட முயற்சிகளில்

செயல்பாடு ஏற்படுகிறது. அவனுடைய உள்ளத்தில் ஓர் எரிச்சல் இருக்கிறது. மற்றவர்களிடம் இருந்து மறைக்கிறான். பிடிபட்டால் தண்டனை அடைய நேரிடுகிறது. மனிதன் நம்பிக்கையும் சந்தோஷமும் கொண்டிருந்தால், அவன் உள்ளத்தில் அமைதி, ஆனந்தம், இனிமை முதலியவை நிரம்பி நிற்கும். வரவேண்டிய பணம் வந்துவிடும். வாழ்க்கைக்கு என்ன வேண்டும்? என்று பிராரப்தத்தில் இருக்கிறதோ, அந்தப் பொருள் எந்தவிதமாகவாவது கிடைத்து கொண்டேயிருக்கும்.

வியாபாரத்தில் நஷ்டம் ஏற்படுவது; வீட்டில் மரணம் நிகழ்வது; காரணம் இல்லாமலேயே அவமானமும், கெட்ட பெயரும் அடைய நேரிடுவது போன்ற துக்கம் தரும் சூழ்நிலையை யாரும் வேண்டுவதில்லை. இருப்பினும் அவை நம்மிடம் வந்து விடுகின்றன. இவ்விதமே சுகம் தரும் சூழ்நிலையும் வரும். அதை யாரும் தடுக்க முடியாது. ஸ்ரீமத் பாகவதத்தில் வரும் சுலோகம் பின்வருமாறு—

**ஸுக$_2$மைந்த்$_3$ரியகம் ராஜந் ஸ்வர்கே$_3$ நரக ஏவ ச ।**
**தே$_3$ஹிநாம் யத்$_3$ யதா$_2$ து$_3$:க$_2$ம் தஸ்மாந்நேச்சே$_2$த தத்$_3$ பு$_3$த$_4$: ॥**
***(ஸ்ரீமத் பாகவதம் 11/8/1)***

''புலன்கள் வழியாக அடையப்படும் இன்பங்கள் சுவர்க்கத்தில் கிடைப்பதைப் போல நரகத்திலும் கிடைக்கின்றன. சரீரம் எடுத்தவர்களுக்கு, அவர்கள் முயற்சியின்றியே துக்கம் வருவதைப் போலவே இன்பமும் வருகிறது. அதனால் தெள்ளறிவு உடையவர்கள் அவைகளுக்கு (புலன் வழி பெறப்படும் அனுபவங்களுக்கு) விருப்பம் கொள்ளக் கூடாது.''

பணப் பிராரப்தம் வேறு, போகப் பிராரப்தம் வேறு என்று ஏற்கனவே கூறியிருக்கிறோம். ஒருவனுக்கு பணப் பிராரப்தம் இருக்கிறது. வேறு ஒருவனுக்குப் போகப் பிராரப்தம் இருக்கிறது. இவ்விதமே தர்ம முயற்சியும், மோட்ச முயற்சியும் தனித்தனி. அதாவது ஒருவன், தர்மத்திற்காக (புருஷார்த்தம்) முயற்சி செய்கிறான். மற்றொருவன், மோட்சத்திற்காக முயற்சி செய்கிறான். தர்ம முயற்சியில் உடல், பணம் முதலிய பொருட்களுக்கு

முக்கியத்துவம் இருக்கிறது. மோட்ச முயற்சியில் எண்ணத்திற்கும் சிந்தனைக்கும் (பாவம், விசாரம்) முக்கியத்துவம் இருக்கிறது.

ஒன்றில் 'செயல்பாடு' இருக்கிறது. மற்றொன்றில் 'ஆதல் நிலை' இருக்கிறது. இரண்டு துறைகளும் தனித்தனி. செய்ய வேண்டியது கடமை; ஆதல் என்பது பயன். மனிதனுக்குக் கர்மம் செய்ய அதிகாரமுண்டு. அதாவது, அவன் செய்ய முடியும். ஆனால், அவனுக்கு பயனில் அதிகாரம் கிடையாது; அது அவனது ஆட்சியில்லை. ***'கர்மணி ஏவ அதி$_4$காரஸ்தே மா ப$_2$லேஷு கதா$_3$சந ।' (கீதை 2/47).*** இதிலிருந்து 'ஆதலின் நிறைவு' பிராரப்தத்தின்படி அவசியம் கிடைக்கும். அதற்கு அப்படி ஆகவேண்டும்; இப்படி ஆகக்கூடாது என்று ஆசைப்படக் கூடாது. ஆனால், கடமையான கர்மத்தைச் செய்யும்பொழுது சாஸ்திர விதிகளுக்கும், உலக மரியாதைக்கும் கட்டுப்பட்டுச் செய்ய வேண்டும்; செய்வது முயற்சிக்குட்பட்டதாகும். ஆனால், 'ஆவதோ' பிராரப்தத்தின் வசப்பட்டது. இதனால்தான் மனிதன் 'செய்யும் விஷயத்தில்' சுதந்திரமாக இருக்கிறான். ஆனால், 'ஆகும் விஷயத்தில்' பராதீனமாக (பிரிதொன்றுக்குக் கட்டுப்பட்டு) இருக்கிறான். மனித முன்னேற்றத்தில் சிறப்பான அம்சம் செய்யும்பொழுது கவனமாய் இரு. 'ஆனதை (கிடைத்த பலனை)க் கொண்டு' திருப்தியாய் இரு.

கிரியமாண (நிகழ்நிலை) கர்மம், ஸஞ்சித (சேர்ந்துள்ள) கர்மம், பிராரப்த (பயன் அளிக்கத் தொடங்கிவிட்ட) கர்மம் ஆகிய இம்மூவகை கர்மங்களிலிருந்தும் விடுபட வழி என்ன?

பிரகிருதி, புருஷன் என்று இரண்டு உண்டு. பிரகிருதியின் குணம் = இடையறாத இயக்கம் அல்லது செயல்பாடு அதாவது மாறுபாடு. புருஷனிடத்தில் மாறுதல் என்கிற செயலே கிடையாது. பிரகிருதியுடன் ஒட்டுறவு ஏற்பட்டு, ஒருவன் பிரகிருதியில் ஒன்றிய புருஷனாக ஆகும்போது, அவன் 'செய்பவன்', 'துய்ப்பவன்' ஆக ஆகிறான். எப்பொழுது புருஷன் (ஜீவாத்மா) பிரகிருதியினுடைய சம்பந்தத்தைத் துண்டித்து

விடுகிறானோ, அதாவது, தன்னுடைய ஸ்வரூபத்தில், தானே தானாக நின்று விடுகிறானோ, அப்பொழுது அவனை எந்தக் கர்மமும் தொட முடியாது, தொடரவும் முடியாது.

### *பிராரப்தத்தைப் பற்றிய மற்ற உண்மைகள் பின்வருமாறு:–*

1. உணர்வின் விழிப்பு (அதாவது முக்தி உணர்வு) ஏற்பட்ட பிறகும்கூட ஞானிக்குப் பிராரப்தமுண்டு என்று கூறுவது, அஞ்ஞானிகளுக்குப் புரிய வைக்க வேண்டும் என்பதற்காகத்தான். ஏனெனில், சாதக–பாதகச் செயல்கள் நிகழ்வது பிராரப்தம். ஆனால், உயிர்களை மகிழ்விப்பதோ, துன்பம் அடையச் செய்வதோ பிராரப்தத்தின் வேலையில்லை. இது அஞ்ஞானத்தின் (அறியாமையின்) வேலை. அஞ்ஞானம் தீர்ந்து ஞானம் பெற்றவன், சுகம், துக்கம் இரண்டையுமே பெறமாட்டான். அவனுக்கு இது அனுகூலநிலை அல்லது பிரதிகூலநிலை என்று மட்டுமே தெரியும். இந்த அறிவு குற்றமுள்ளதாக ஆகாது. ஆனால், சுகம்–துக்கம் என்று மனத்தில் மாறுதலை ஏற்றுக்கொள்வதுதான் குற்றமாகும். எனவே, உண்மையில் ஞானிக்குப் பிராரப்தம் கிடையாது. இதை விளக்கமாகக் கூறவேண்டுமென்றால் ஞானிக்கு 'பிராரப்தம் உண்டு' என்று கூறும்பொழுது ஏற்படுகின்ற சூழ்நிலையை வைத்துக் கூறுகிறோம். அவன் அந்த சூழ்நிலையைச் சுகமாகவோ, துக்கமாகவோ மாற்ற மாட்டான். அதனால், அவனுக்கு 'பிராரப்தம் இல்லை' என்பதே உண்மையாகும்.

2. பிராரப்தத்திற்கு ஏற்றவாறே புத்தி அமையும். எப்படியென்றால் ஒரே கடைத்தெருவில் ஒரு வியாபாரி பண்டத்தை விற்கிறான்; மற்றொருவன் பண்டம் வாங்குகிறான். பின்னால் பண்டங்களின் விலை உயர்ந்துவிட்டால், விற்ற வியாபாரிக்கு நஷ்டம்; வாங்கின வியாபாரிக்கு லாபம். பண்டங்களின் விலை இறங்கிவிட்டால், விற்றவனுக்கு லாபம்; வாங்கினவனுக்கு நஷ்டம். இங்கே வாங்குகின்ற அல்லது விற்கின்ற புத்தி, பிராரப்தத்தினால் ஏற்பட்டது. அதாவது,

நஷ்டமடைய வேண்டும் அல்லது லாபம் அடையவேண்டும் என்று பிராரப்தத்தில் இருக்கிறதோ, அதற்கேற்றவாறுதான் முதலில் புத்தியும் ஏற்படுகிறது. அப்பொழுதுதான் பிராரப்தத்திற்கு ஏற்றவாறு பலனும் ஏற்படும். ஆனால், வாங்குகிற அல்லது விற்கிற வியாபாரத்தை நியாயப்படி செய்வதா? அல்லது அநியாய முறையில் செய்வதா? என்று முடிவு செய்வதற்கு மனிதனுக்கு முழு சுதந்திரம் உண்டு. ஏனெனில், இது நிகழ்நிலைச் செயல்; பிராரப்தம் அல்ல.

3. ஒரு மனிதன் கையிலிருந்து கண்ணாடி கீழே விழுந்து உடைந்துவிட்டது. இது அந்த மனிதனின் கவனக்குறைவா? அல்லது பிராரப்தமா?

செயலைப் புரியும்பொழுது கவனமாக இருக்க வேண்டும். ஆனால், செயலில் தவறு நேர்ந்துவிட்ட பிறகு, அதை பிராரப்தம் (நடக்க வேண்டியது நடந்தது) என்று எண்ணிவிட வேண்டும். நீ விழிப்புடன் இருந்திருக்க வேண்டும் என்பது இதன் பொருள். இனி, நீ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்; மீண்டும் இந்தத் தவறைச் செய்யாதே என்பதுதான் பொருள். அதாவது, நடந்துவிட்டதைப் பிராரப்தம் என்று ஒத்துக்கொண்டு விடவேண்டும். அதை கவனக்குறைவு என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. அதாவது, ஒரு காரியத்தைச் செய்யும் பொழுது கவனமாய் இருப்போம். ஏதாவது நடந்துவிட்டால், அப்பொழுது வீண் கவலையை விட்டுவிட வேண்டும்.

4. பிராரப்தத்தினால் ஏற்படும் வியாதிக்கும், தவறான உணவைச் சாப்பிடுவதனால் ஏற்படும் வியாதிக்கும் என்ன வேற்றுபாடு?

உணவுக் கோளாறினால் ஏற்பட்ட நோய் மருந்தினால் தீர்ந்துவிடும். ஆனால், பிராரப்தத்தால் ஏற்பட்ட நோய் மருந்தினால் தீராது என்றாலும், ***'மஹா ம்ருத்யஞ்ஜய'*** முதலிய ஜபங்கள், வேள்விகள் முதலிய அனுஷ்டானங்கள் செய்வதனால், பிராரப்த வியாதியும் தீரலாம். ஆனால், செய்யும் அனுஷ்டானம் பலம் வாய்ந்ததாய் இருக்கவேண்டும்.

வியாதியில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று மனத்தைப் பீடிக்கிற 'ஆதி'; இரண்டாவது உடலைப் பீடிக்கிற வியாதி. ஆதியிலும் இரண்டு வகை உண்டு. ஒன்று வருத்தம், கவலை முதலியனவாகும். இரண்டாவது பித்து (பைத்தியம்) பிடித்தல். வருத்தம், கவலை என்பவை அறியாமையினால் ஏற்படுகின்றன. அதனால் அறிவு ஏற்பட்டால் வருத்தம், கவலைகள் நீங்கிவிடுகின்றன. பிராரப்தப்படியே பித்து பிடிக்கும். ஆனால், ஞானி பித்துப் பிடித்த நிலையிலும் தவறான அல்லது சாஸ்திரம் தடை செய்த செயல்களைச் செய்ய மாட்டான்.

5. தெரிந்தே செய்யப்படும் தற்கொலை, அகால மரணம் என்று கூறப்படுகிறது. தற்கொலை செய்து கொள்கின்றவனுக்கு மீண்டும் ஒரு கொலை செய்த பாவம் சேரும். இது புது பாவச் செயலே அன்றிப் பிராரப்தம் ஆகாது.

விபத்துக்களால் ஏற்படும் மரணத்தை எதிர்பாராத மரணம் என்கிறோம். சாதாரண மரணம் போல் எதிர்பாராத மரணமும் பிராரப்தத்தின் காரணமாக ஆயுள் முடிந்தபிறகே ஏற்படுகிறது.

6. ஒரு மனிதன் ஒருவனைக் கொன்றுவிட்டான். அவனது இச்செயல் சென்ற பிறவியின் பழிக்குப்பழி ஆகும். இறந்தவன் முன்வினைகளின் பயனை அடைந்தான். பிறகு கொன்றவன் பெயரில் என்ன குற்றம்?

ஆம், கொன்றவன் பெயரில் குற்றம்தான். ஏனெனில், தண்டனை கொடுப்பது அரசன் உரிமை. அந்த உரிமை சாதாரண மனிதனுக்குக் கிடையாது. ஒருவன், கொலையாளிகளின் பிடியிலிருந்த ஒருவனை விடுவித்து, பின்பு அவனைத் தானே கொன்று விடுகிறான். என்றாலும், இப்படிக் கொன்றவனுக்கும் தூக்குத்தண்டனை விதிக்கப்படும். ஏனெனில், குற்றவாளியைக் கொல்வதற்கான கட்டளை, அரசனின் ஏவலர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. கொல்பவன், நான் முற்பிறப்பில் நடந்ததற்காகப் பழிவாங்குகிறேன் என்று நினைவு கொள்ள மாட்டான்.

இருப்பினும், கொல்வது அவன் குற்றமாகும். பிறரைக் கொல்வதற்கு யாருக்கும் அதிகாரம் கிடையாது. மரணத்தை யாரும் விரும்புவது இல்லை. பிறரைக் கொல்வது தன்னுடைய பகுத்தறிவை அவமதிப்பதாகும். மனிதனுக்கு விவேகம், அதாவது பகுத்தறியும் ஆற்றல் கிடைத்திருக்கிறது. அதன்படி நல்லதையோ, கெட்டதையோ செய்ய, அவனுக்கு சுதந்திரம் உண்டு. அதனால் விவேகத்தை அவமதித்துப் பிறரைக் கொல்வதோ, கொல்லும் போக்கை ஏற்றுக்கொள்வதோ பெரும் குற்றமாகும்.

இவ்விதம் 'சென்ற பிறவியின் பழிக்குப்பழி' என்று கூறிக் கொண்டு ஒருவன் மற்றவனைக் கொன்று கொண்டே போனால், இந்த சங்கிலித் தொடர் அறவே அறாது. மனிதன் ஒருக்காலும் முக்தியை அடைய மாட்டான்.

சென்ற பிறவியின் பழிக்குப்பழி வாங்குதல் மற்ற யோனிகளில் பிறந்து செய்யப்படலாம். ஆனால், மனிதப்பிறவி பதில் கெடுதல் (பழிக்குப்பழி) செய்வதற்காக ஏற்பட்டதல்ல. ஆனால், ஒருக்கால் சென்ற பிறவி கொலையாளியை, இப்பிறவியில் பார்க்கும்பொழுது இயற்கையாகவே வெறுப்பு ஏற்படலாம். கெட்டவனாக அவனுக்குத் தொல்லை கொடுப்பதும் குற்றம்தான். ஏனெனில், இது புது கர்மம் ஆகிவிடுகிறது.

பிராரப்தப்படிதானே ஒருவனுக்கு புத்தி ஏற்படும். பிறகு குற்றம் எங்கே?

புத்தியில் இருக்கும் துவேஷத்துக்கு (கெடுதல் செய்யும் வெறுப்பு) ஒருவன் பயப்படுவது தவறு. அறிவிலுள்ள விருப்பு–வெறுப்புகளுக்கு வசப்படாமல் விவேகத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். கீதையும், 'புத்தியில் ராக–த்வேஷங்கள் இருக்கின்றன. அவற்றின் வசப்படாதே (3/40)' என்று கூறுகிறது. (***'தயோர்ந வஶமாக$_3$ச்சே$_2$த்'* – கீதை 3/34**)

7. பிராரப்தத்திற்கும், பகவத் கிருபைக்கும் என்ன மாறுபாடு?

இங்கே உயிருக்குக் கிடைப்பதெல்லாம் பிராரப்தத்தின்படியே கிடைக்கின்றன. ஆனால், பிராரப்த விதியை நடத்துபவன், பகவான். ஏனெனில், கர்மங்கள் ஜடமானவை (உயிர் இயக்கமற்றவை). அவை பயன்தர முடியாது. பகவான் கட்டளைப்படிதான் அவை பயன்தர முடியும். ஒரு மனிதன் நாள் முழுவதும் வேலை செய்கிறான். வேலைக்குத் தக்க கூலி கிடைக்கிறது, உண்மைதான். ஆனால், அது வயலின் சொந்தக்காரன் மூலமாகவே கிடைக்கிறது. வேலை செய்தால்தான் பணம் கிடைக்கும். வேலை செய்யாமல் பணம் கிடைக்குமா என்ன? வேலைக்குத்தான் கூலி கிடைக்கிறது. ஆனால், யஜமானன் இல்லாமல் கூலி யாரிடமிருந்து கிடைக்கும்? எங்கேயோ காட்டிற்குச் சென்று நாள் முழுவதும் வேலை செய்தாலும் கூலி கிடைக்குமா? கிடைக்காது. இது யார் கூறிச் செய்யப்பட்ட வேலை? கூலி கொடுப்பது யாருக்குப் பொறுப்பு? என்பதைக் கவனிக்க வேண்டும்.

ஒரு வேலைக்காரன், தன் வேலையைத் திறமை—உற்சாகம்—ஈடுபாட்டுடன் முதலாளியை மகிழ்விக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் செய்தால், முதலாளி பேசிய கூலியைவிட அதிகம் கொடுக்கிறான். அதற்கு மேலும், தன்னுடைய சொத்துக்குப் பங்காளி ஆகவும் ஆக்கிக் கொள்கிறான். அவ்விதமே, ஈசுவரன் கட்டளைப்படி, அவரைத் திருப்தி செய்யவே, எல்லாக் காரியங்களையும் செய்தால், பகவான் அவனுக்கு மற்றவர்களைவிட அதிக நன்மைகள் தருகிறார். தவிர, பகவானிடத்தில் தன்னை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்டு செயல்களைச் செய்பவன் பக்தனாகிறான். அப்படிப்பட்ட பக்தனுக்கு பகவானே பக்தனாகிவிடுகிறார்.

*ஏவம் ஸ்வப$_4$க்த்யோ ராஜந் ப$_4$க$_3$வாந் ப$_4$க்தப$_4$க்திமாந் ।*

***(ஸ்ரீமத் பாகவதம் 10/86/59)***

உலகில் எந்த முதலாளியும் தன் வேலைக்காரனைத் தன்னுடைய முதலாளி ஆக்கிக் கொள்ள மாட்டான். ஆனால், பகவானோ தன்னைச் சரணடைந்த பக்தனைத் தனக்கு யஜமானனாக ஆக்கிக் கொள்கிறான்! இந்த பெருந்தன்மை

பகவானிடத்தில் மட்டும்தான் இருக்கிறது. இப்படிப்பட்ட பிரபுவின் பாதங்களில் சரணடையாமல் எந்த மனிதன், தோன்றி அழியும் பதார்த்தங்களுக்கு அடிமையாகி நிற்கின்றானோ, 'அவன் புத்தி எல்லாவிதத்திலும் இழிந்துவிட்டது' என்று கொள்ளவேண்டும். நமக்கு எதிரேயே பிறந்து அழியும் பொருட்கள் நமக்கு எவ்வளவு உதவ முடியும்?

இந்த விஷயத்தைச் சாமானிய மனிதர்கள் புரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

***(ஸ்ரீமத் பகவத்கீதை 18/12–ன் விரிவுரையிலிருந்து)***



## வருண வ்யவஸ்தை எதற்காக?
## (வருணப் பகுப்பின் பொருள்)

கர்மங்கள் இரண்டு வகைப்பட்டவை. அவை 1) பிறவியைத் தொடங்குபவை, 2) போகம் தருபவை. எந்தக் கர்மங்களின் பயனாக உயர்ந்த அல்லது தாழ்ந்த பிறவிகளில் பிறப்பு ஏற்படுகிறதோ, அதைப் பிறப்பைத் தொடங்கும் கர்மங்கள் என்று கூறுகிறோம். எவற்றின் காரணமாக சுகம் அல்லது துக்கத்தின் அனுபவம் ஏற்படுகிறதோ, அவற்றை போகம் தரவல்ல கர்மங்கள் என்று கூறுகிறோம். சூழ்நிலைகளைத் தரும் கர்மங்களை, ஸ்ரீமத் பகவத்கீதை (18/12) ***'அநிஷ்டம்'***, ***'இஷ்டம்'***, ***'மிஶ்ரம்'*** என்று அழைக்கிறது.

ஆழ்ந்து நோக்கினோமானால் கர்மங்களே போகம் அல்லது அனுபவம் தருபவைதான். ஜன்மம் தொடங்கும் கர்மங்களும் அனுபவத்தைக் கொடுக்கின்றன. போகத்திற்கான கர்மங்களும் அனுபவம் அல்லது போகத்தைத் தருகின்றன. எடுத்துக்காட்டாக, உயர்ந்த குலத்தில் பிறந்தவனுக்கு மரியாதை கிடைக்கிறது, பாராட்டு கிடைக்கிறது. ஆனால், கீழ்க்குலத்தில் பிறந்தவனை அவமதிக்கிறார்கள், ஒதுக்குகிறார்கள். அதேபோல சுகம் தரும்

சூழ்நிலை கொண்டவனுக்கு மதிப்பு ஏற்படுகிறது. துக்கச் சூழ்நிலையில் இருப்பவனுக்கு அவமதிப்பு ஏற்படுகிறது. அதாவது மரியாதை, அவமரியாதை என்ற உருவத்திலுள்ள போகம், 1) பிறவியைத் தொடங்கும் கர்மங்கள், 2) போகம் தரும் கர்மங்கள் என இரண்டு வகை கர்மங்களால் ஏற்படுவதுதான். ஆனால், ஜன்ம ஆரம்பக் கர்மங்களினால் ஏற்படும் ஜன்மத்தில், மரியாதை அல்லது அவமரியாதையாகக் கிடைக்கும் போகம் முக்கியமல்ல. ஏனெனில், மரியாதையும் அவமரியாதையும் எப்பொழுதாவது கிடைக்குமே தவிர, எப்பொழுதும் கிடைக்காது. ஆனால், போகம் தரும் கர்மங்களின் பயனாக, சாதக–பாகதச் சூழ்நிலை வருகிறதே, அந்தச் சூழ்நிலையின் போகம் முக்கியமானது. ஏனெனில், பரிஸ்திதி (சூழ்நிலை) எப்பொழுதும் வந்து கொண்டே இருப்பதாகும்.

போகம் விளைவிக்கும் கர்மங்களை உபயோகிக்கும் முறைகளில் நல்லவையோ, கெட்டவையோ தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கு மனிதனுக்குச் சுதந்திரம் உண்டு. அவன் எந்தச் சூழ்நிலையிலும் அவன் விரும்பும்படி சுகமாகவோ, துக்கமாகவோ இருக்கமுடியும். அதற்கேற்ற சாதகங்களையும் உபகரணங்களையும் அவன் ஏற்படுத்திக் கொள்ளமுடியும். எவன் சூழ்நிலையைப் பொறுத்து சுக–துக்கம் அனுபவிக்கிறானோ, அவன் அசடன் (மடையன்). ஆனால், அதையே எவன் சாதன உபகரணங்களாக மாற்றிக் கொள்கிறானோ, அவன் புத்திசாலியான சாதகன் (முயற்சியாளன்). அனுகூல–பிரதிகூலமான சூழ்நிலையை எப்படி சாதனைக்கு உபகரணமாக மாற்றிக் கொள்வது?

அனுகூல சூழ்நிலை வரும்பொழுது, அதை பிறருடைய நன்மைக்காகப் பயன்படுத்த வேண்டும். பிரதிகூல நிலைமை வந்தால் சுகத்தின் இச்சையை விட்டுவிட வேண்டும். மற்றவருக்குச் சேவை செய்வதும், சுகத்தின் இச்சையைத் தியாகம் செய்வதுமாகிய இவையிரண்டும் சாதனங்களாகும். சாதனம் என்றால் நற்கதி அடைய மனிதன் செய்யும் செயல்கள்.

சாஸ்திரத்தில், உயிரானது (ஜீவாத்மா) புண்ணியம் அதிகமானால் சுவர்க்கத்திற்கும், பாவம் அதிகமானால் நரகத்திற்கும் போகிறது. புண்ணியமும் பாவமும் சமமாய் இருந்தால் மனிதன் ஆகிறது. இதை நோக்குங்கால், எந்த வர்ண–ஆசிரம–தேசத்தவனானாலும், ஒருவன் முழுமையாக புண்ணியாத்மாகவோ, பாவியாகவோ இருக்க முடியாது.

சமமான புண்ணியமும் பாவமும் கொண்டு மனிதனாக ஆகும்பொழுது, அவனிடத்திலும் புண்ணிய–பாவத்தில் சற்று ஏற்றக்குறைவு இருக்கும். அதாவது, ஒருவனிடம் புண்ணியம் அதிகமிருக்கும்; வேறொருவனிடத்தில் பாவம் அதிகமிருக்கும்.

இது எப்படியென்றால், தேர்வில் (பரீட்சையில்) அநேக விஷயங்கள் (வினா–தாள்கள்) இருக்கின்றன. அவற்றில் ஒரு தாளில் அதிக மதிப்பெண்களும், மற்றொன்றில் குறைந்த மதிப்பெண்களும் கிடைக்கின்றன. எல்லாத் தாள்களையும் சேர்த்து எவ்வளவு மதிப்பெண்கள் வருகின்றனவோ, அவைகளைக் கொண்டுதான் தேர்வு முடிவுகள் செய்யப் படுகின்றன. இவ்விதமே ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு பகுதியில் அதிகப் புண்ணியமும், மற்றொரு பகுதியில் அதிக பாவமும் சேர்கின்றன.

எல்லாவற்றையும் கூட்டி எவ்வளவு புண்ணிய–பாவங்கள் இருக்கின்றனவோ, அவற்றிற்கேற்றவாறு பிறவி கிடைக்கிறது. தனித்தனி விஷயங்களில் எல்லோருடைய புண்ணிய–பாவமும் சமமாக இருந்தால், எல்லோருக்குமே ஒரே மாதிரி சுகம் அல்லது துக்கம் தரும் பொருள்நிலை கிடைக்கவேண்டும். ஆனால், அப்படி நடப்பதில்லை. இதனால் எல்லோருடைய பாவ–புண்ணியத்திலும் பலவிதமான ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றன. இதேதான் சத்துவம் முதலிய குணங்கள் விஷயத்திலும் அமைத்துப் பார்க்க வேண்டும்.

குணங்களிலும் பிரிவுகள் உண்டு. எல்லாவற்றையும் சேர்க்கும்பொழுது சத்துவ குணம் அதிகமுள்ளவர்கள் மேல் உலகத்திற்குச் செல்கிறார்கள். ரஜோ குணம் அதிகமுள்ளவர்கள்

நடு உலகம், அதாவது மனித லோகத்திற்கு வருகிறார்கள். தமோ குணம் அதிகமுள்ளவர்கள் கீழ்நிலைக்குச் செல்கிறார்கள். இம் மூவகையினரிலும்கூட குணங்களின் ஏற்றத்தாழ்வுகளின் காரணமாக, அநேகவித பேதங்கள் இருக்கின்றன. சத்துவ குணம் அதிகம் பெற்றவன் பிராமணன் ஆகிறான். ரஜோ குணம் முக்கியமாகவும், சத்துவ குணம் குறைவாகவும் உள்ளவன் க்ஷத்திரியானாகிறான். ரஜோ குணத்தைப் பிரதானமாகவும், தமோ குணத்தை கௌணமாகவும் (குறைந்த அளவிலும்) கொண்டவன் வைசியனாகவும், தமோ குணத்தைப் பிரதானமாகக் கொண்டவன் சூத்திரனாகவும் ஆகிறான். இப்படிக் கூறும்பொழுது புது நிலையில் குணங்களைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால், இவைகளுக்கு உள்ளேயே இருக்கின்ற ஏற்றத்தாழ்வுகளைப் பற்றித் தெரிந்து கொள்வோம்.

ரஜோ குணம் பிரதானமான மனிதர்களுள், சத்துவ குணத்தின் ஆதிக்கமுள்ளவர்கள் பிராமணர்கள் ஆனார்கள். இப் பிராமணர்களிடையேயும் ஜன்மத்தின் பேதத்தினால் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்று இருக்கின்றார்கள். மேலும், சூழ்நிலைகளின் உருவத்தில் கர்மங்களின் பயனும் பலவிதங்களில் மாறுபட்டுக் கிடைக்கிறது. அதாவது, எல்லா பிராமணர்களுக்குமே ஒரே தரமான சுகம் அல்லது துக்கம் தரும் சூழ்நிலை ஏற்படுவதில்லை. இதைப் பார்க்கும்பொழுது பிராமணப் பிறவியிலும் மூன்று குணங்கள் உண்டு என்று ஒத்துக்கொள்ள வேண்டும். இவ்விதமே க்ஷத்திரிய–வைசியர்களிலும்கூட பிறப்பினால் ஏற்றத்தாழ்வு ஒத்துக் கொள்ளப்படுகிறது. சுகமோ, துக்கமோ தரும் சூழ்நிலையும் பலவிதமாகக் கிடைக்கிறது. மூன்று உலகங்களிலும் இந்த மூன்று (சத்துவ–ரஜோ–தமோ) குணங்களுக்குட்படாத வஸ்துவே இல்லை என்று கீதை (18/40) கூறுகிறது.

இப்பொழுது மனிதப்பிறவியில்லாத மிருகங்கள் மற்றும் பறவைகளிலும் உயர்ந்தவை, தாழ்ந்தவை என்று இருக்கின்றன. பசுவை உயர்வாகக் கருதுகிறோம். நாய், கழுதை, பன்றி

முதலியவற்றைத் தாழ்வாகக் கருதுகிறோம். புறா உயர்ந்தது; காக்கை, கழுகு முதலியன தாழ்ந்தவை. இவற்றிற்கும் சுகமோ அல்லது துக்கமோ தரும் சூழ்நிலைகள் ஒரே மாதிரி வருவதில்லை. தாத்பரியம் (கருத்து) என்னவென்றால் மேற்கதி, நடுகதி, கீழ்கதியில் போகின்றவர்களிலும்கூட பலவித ஜாதி பேதமும் சூழ்நிலையும் இருக்கவே செய்கின்றன.

***(ஸ்ரீமத் பகவத்கீதை 18/41–ன் விரிவுரையிலிருந்து)***



## ஜன்மத்தால் ஜாதியா அல்லது கர்மத்தால் ஜாதியா?

உயர்ந்த அல்லது தாழ்ந்த இனங்களில் (யோனிகளில்) எவ்வளவு உடல்கள் ஏற்பட்டாலும், அவையெல்லாம் குணம், கர்மம் – இவற்றிற்கு ஏற்றவாறே அமைகின்றன. இக்கருத்தையும், முன்பு கூறிய கருத்துக்களையும் பின்வரும் சுலோகங்களில் காணலாம்—

***காரணம் கு$_3$ணஸங்கோ$_3$ऽஸ்ய ஸத$_3$ஸத்$_3$யோநிஜந்மஸு ||***

***(ஸ்ரீமத் பகவத்கீதை 13/21)***

***கர்மண: ஸுக்ருதஸ்யாஹு:***
***ஸாத்த்விகம் நிர்மலம் ப$_2$லம் ।***
***ரஜஸஸ்து ப$_2$லம் து$_3$:க$_2$ம்***
***அக்ஞாநம் தமஸ: ப$_2$லம் ||***

***(ஸ்ரீமத் பகவத்கீதை 14/16)***

***ஊர்த்$_4$வம் க$_3$ச்ச$_2$ந்தி ஸத்த்வஸ்தா$_2$***
***மத்$_4$யே திஷ்ட$_2$ந்தி ராஜஸா: ।***
***ஜக$_4$ந்யகு$_3$ணவ்ருத்திஸ்தா$_2$***
***அதோ$_4$ க$_3$ச்ச$_2$ந்தி தாமஸா: ||***

***(ஸ்ரீமத் பகவத்கீதை 14/18)***

குண கர்மத்திற்கு ஏற்றவாறுதான் மனிதனுக்குப் பிறவி ஏற்படுகிறது. அதனால், மனிதனின் ஜாதி பிறவியினால் என்று ஏற்றுக்கொள்ளப்படுகிறது. முதலாவதாக, ஸ்தூலமான உடலை

வைத்துக் கொண்டு பார்க்கும்பொழுது மண உறவு, உணவு முதலியவை பிறவியைப் பிரதானமாகக் கொண்டு செய்ய வேண்டும். தன்னுடைய ஜாதிக்கு (வர்ணத்திற்கு) ஏற்றவாறு உணவு, விவாகம் முதலிய கர்மங்களைச் செய்ய வேண்டும். இரண்டாவதாக, எவனுக்கு லௌகிக போகம், பணம், மானம், சுகம் முதலியவை குறிக்கோளாக இருக்குமோ, அவனுக்குத் தன் ஜாதிக்குரிய கர்மங்களைச் செய்வதும், வர்ணத்தின் மரியாதையைக் காத்து நடப்பதும் இன்றியமையாததாகிறது. அவன் வர்ணத்தின் மரியாதைக்குட்பட்டு நடக்காமல் போனால், அவனுக்கு வீழ்ச்சி ஏற்படுகிறது.

**ஆசாரஹீநம் ந புநந்தி வேதா**
**யதப்யதீதா: ஸஹ ஷட்பிரங்கை: ।**
**சந்தாம்ஸ்யேநம் ம்ருத்யுகாலே த்யஜந்தி**
**நீடம் சகுந்தா இவ ஜாத பக்ஷா: ॥**

**(வஸிஷ்ட ஸ்ம்ருதி)**

சிக்ஷா, கல்பம், நிருக்தம், சந்தம், வியாகரணம், ஜோதிஷம் – இந்த ஆறு அங்கங்களுடன் படித்த வேதம், நடத்தை கெட்ட மனிதனைத் தூய்மையாக்காது. இறகு முளைத்தவுடன் பறவை கூட்டை விடுவதுபோல, மரணத்தின்போது அவனை வேதம் விட்டுவிடும். ஆனால், எவனுக்கு பரமாத்மாவே குறிக்கோளோ, லௌகிக சுகம் தேவையில்லையோ, அவனுக்கு சத்சங்கம் (நல்லோர் இணக்கம்), நூல் படிப்பு, ஜபம், தியானம், புராணம் கேட்பது, கீர்த்தனம், பரஸ்பரம் விசாரம் செய்வது முதலிய பகவான் சம்பந்தப்பட்ட காரியங்களே முக்கியமானதாக இருக்கும். அப்பொழுது, மனிதனின் பாரமார்த்திகமான (மேலுலக சம்பந்தமான) எண்ணங்கள், நடத்தை முதலியவை முக்கியம். ஜாதியோ, வர்ணமோ அல்ல.

மூன்றாவதாக, பரமாத்மாவை அடைவதையே குறிக்கோளாகக் கொண்டவன் கூட, பகவான் சம்பந்தப்பட்ட காரியங்களை முக்கியமாகச் செய்து கொண்டே, வர்ண–ஆசிரமத்திற்கு விதிக்கப்பட்ட கடமைகளையும் பூஜை மனப்பாங்குடன்,

அதாவது பகவானுடைய பிரீதிக்காகச் செய்வான். இதை பகவான் பின்வருமாறு கூறியிருக்கிறார்—

***யத: ப்ரவ்ருத்திர்பூ$_4$தாநாம் யேந ஸர்வமித$_3$ம் ததம் ।***
***ஸ்வகர்மணா தமப்$_4$யர்ச்ய ஸித்$_3$தி$_4$ம் விந்த$_3$தி மாநவ: ॥***

***(ஸ்ரீமத் பகவத்கீதை 18/46)***

இந்தச் சுலோகத்தில் இந்த சிறந்த விஷயம் கூறப்பட்டு இருக்கிறது. ''எதிலிருந்து இந்த முழு பிரபஞ்சமும் வெளிவந்ததோ, எதனால் இந்த முழு பிரபஞ்சமும் ஊடுருவப்பட்டிருக்கிறதோ, அந்த பரமாத்மாவைக் குறிக்கோளாகக் கொண்டு, அவருடைய பிரீதிக்காகவே, பூஜையாகத் தங்களுடைய வர்ணத்திற்கு ஏற்றவாறு கர்மங்கள் செய்யப்படட்டும்.''

இதில் ஒவ்வொரு மனிதனுக்கும் (மனித இனத்திற்கு மட்டும்) அதிகாரம் உண்டு. தேவர்கள், அசுரர்கள், மிருகங்கள், பட்சிகளுக்குத் தாமாக அதிகாரம் கிடையாது. ஆனாலும் அவர்களுக்கும் பரமாத்மாவின் பக்கத்திலிருந்து தடையும் கிடையாது. எல்லோரும் பரமாத்மாவின் அம்சம். ஆகையினால் பரமாத்மாவை அடைவதில் எல்லோருக்கும் உரிமை உண்டு. ஒவ்வொரு பிராணிக்கும் பகவான் மேல் உரிமை இருக்கிறது. இதிலிருந்து பரஸ்பர விவகாரத்தில் அதாவது உணவு, விவாகம் முதலிய உடல் சம்மந்தப்பட்ட செயல்களில் பிறப்புக்கு முக்கியத்துவம் இருக்கிறது. பரமாத்மாவை அடைவதில் எண்ணம், விவேகம், கர்மம் – இவை முக்கியப்பங்கு வகிக்கின்றன. இதை வைத்துக் கொண்டுதான் பாகவத ஆசிரியர் கூறுகிறார்— ''ஒரு மனிதனுடைய வர்ண லட்சணங்கள் மற்றொரு வர்ணத்தாரிடம் இருக்குமானால், அவனையும் அந்த வர்ணத்தைச் சார்ந்தவனாகவே எண்ண வேண்டும்.''

***யஸ்ய யல்லக்ஷணம் ப்ரோக்தம்***
***பும்ஸோ வர்ணாபி$_4$வ்யஞ்ஜகம் ।***
***யத$_3$ந்யத்ராபி த்$_3$ருஶ்யேத***
***தத் தேநைவ விநிர்தி$_3$ஶேத் ॥***

***(ஸ்ரீமத் பாகவதம் 7/11/35)***

கருத்து என்னவென்றால் பிராமணருக்கு என்று எந்த லட்சணங்கள் கூறப்பட்டிருக்கின்றனவோ, அந்த லட்சணங்கள் அல்லது குணங்கள் யாரிடமாவது காணப்பட்டால், அவன் பிறவியினால் தாழ்ந்தவனாக இருந்தாலும்கூட, அவனைத் தாழ்வாகக் கருதக்கூடாது.

இவ்விதமே மகாபாரதத்தில், யுதிஷ்டிரர்–நகுலனுக்கு இடையே ஓர் உரையாடல் வருகிறது.

**சூத்ரே து யத் பவேலலக்ஷ்ம**
**த்விஜே தச்ச ந வித்யதே ।**
**ந வை சூத்ரோ பவேத் சூத்ரோ**
**ப்ராஹ்மணோ ந ச ப்ராஹ்மண: ॥**
**யத்ரைதல்லக்ஷ்யதே ஸர்ப்ப**
**வ்ருத்தம் ஸ ப்ராஹ்மண: ஸ்ம்ருத: ।**
**யத்ரைதந்ந பவேத் ஸர்ப்ப**
**தம் சூத்ரமிதி நிர்திசேத் ॥**

*(மஹாபாரதம் வநபர்வம் 180/25,26)*

"ஒரு சூத்திரன் நடத்தையில் சிறந்தவனாக இருந்தால், அந்த சூத்திரனை 'சூத்திரன்' என்று கூறக் கூடாது. பிராமணன், பிராமண கர்மங்கள் இல்லாமலிருந்தால், அவனை 'பிராமணன்' என்றும் கூறக் கூடாது."

இங்கே கர்மங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது; ஜன்மத்திற்கு இல்லை.

சாஸ்திரங்களில் இப்படியெல்லாம் கூறப்படுவதன் உண்மைக் கருத்து என்னவென்றால், மிகத் தாழ்ந்த வர்ணத்தைச் சேர்ந்த மிக சாதாரணமான மனிதன்கூட பாரமார்த்திகத்தில் (உண்மை ஞானத்திற்குரியதில்) முன்னேற்றம் அடைய முடியும். இதில் ஐயத்திற்கு இடமே கிடையாது. அது மாத்திரமல்ல. அந்த வர்ணத்தில் இருந்துகொண்டே புலனடக்கம், மன அடக்கம் போன்ற புது தர்மங்களை முழுமையாகக் காத்து, தன் பெருமையை வெளியிடவும் முடியும். பிறவி என்னவோ பூர்வ கர்மங்களுக்கு ஏற்றவாறு கிடைத்துவிடுகிறது.

*ஸதி மூலே தத்$_3$விபாகோ ஜாத்யாயு: பே$_4$ாக$_3$ா: ॥*
***(யோக தர்சநம் 2/13)***

அவனால் ஒன்றும் செய்ய முடியாது என்றாலும், அந்தப் பிறவியிலிருந்து கொண்டே, புது முன்னேற்றத்தைப் பெற முடியும். இந்த புது முன்னேற்றத்திற்கு ஊக்கம் அளிப்பதற்காகவே, சாஸ்திரங்களில் தாழ்ந்த வர்ணத்தவர்கூட முன்னேற்றத்தில் தைரியத்தை விடக்கூடாது என்ற கருத்துக் கொண்ட வாக்கியங்கள் இருக்கின்றன. உயர்ந்த வர்ணத்தவர் தனக்குரிய உயர்வான கர்மங்களை விட்டுவிட்டால், அவரைத் தக்க கர்மங்கள் செய்யவும் சாஸ்திர வசனங்கள் உற்சாகம் தருகின்றன.

*ப்ராஹ்மணஸ்ய ஹி தேஹோऽயம்*
*க்ஷுத்ரகாமாய நேஷ்யதே ।*

'பிராமணனுடைய உடல் கீழான ஆசைகளை விரும்பாது.'

பிராமணருக்குரிய உணவு பழக்கங்கள் மற்றும் நடத்தை முதலியவைகளை முற்றிலும் கடைப்பிடிக்காத பிராமணர்களை வார்த்தையில்கூட மதிக்கக் கூடாது என்று வேதம் கூறுகிறது. ஆனால், இதற்குமாறாக, சிறந்த நடத்தையும் பகவத் பக்தியும் கொண்ட பிராமணர்களை, ஸ்ரீமத் பாகவதம் முதலிய புராணங்களிலும், மகாபாரதம், இராமாயணம் முதலிய இதிகாச நூல்களிலும் மிகவும் புகழ்ந்து பேசப்பட்டிருக்கிறது.

மிகவும் தாழ்ந்த ஜாதியுடையவனாய் இருந்தாலும்கூட, தெய்வபக்தி உடையவனாயிருந்தால், அவன் பக்தியில்லாத பிராமண வித்வானை விட உயர்ந்தவன் ஆகிறான்.

*அஹோ ப$_3$த ஶ்வபசோऽதோ க$_3$ரீயாந்*
*யஜ்ஜிஹ்வாக்$_3$ரே வர்ததே நாம துப்$_4$யம் ।*
*தேபுஸ்தபஸ்தே ஜுஹுவு: ஸஸ்நுரார்யா*
*ப்$_3$ரஹ்மாநூசுர்நாம க்$_3$ருணந்தி யே தே ॥*
***(ஸ்ரீமத் பாகவதம் 3/33/7)***

''ஆகா! எவனுடைய நாவின் நுனியில் தங்களுடைய பெயர் இருக்கிறதோ, அவன் சண்டாளனாக இருந்தாலும்கூட,

அவன் மகானே. எவர் தங்களுடைய பெயரை உச்சரிக்கிறார்களோ, அவர்கள் முற்பிறவியில் தவம், ஹோமம், தீர்த்த ஸ்நானம், நன்னடத்தை, வேதாத்யயனம் ஆகிய எல்லாவற்றையும் செய்தவர்களாவார்கள்.'' அதாவது, அவற்றிற்கான பலனை, அவற்றைச் செய்யாமலேயே, தங்களுடைய நாமத்தை உச்சரிப்பதாலேயே பெற்றுவிட்டார்கள்!

**விப்ராத்$_3$ த்$_3$விஷட்$_3$கு$_3$ணயுதாத$_3$ரவிந்த$_3$நாப$_4$–**
**பாத$_3$ாரவிந்த$_3$விமுக$_2$ாச்ச்$_2$வபசம் வரிஷ்ட$_2$ம் ।**
**மந்யே தத$_3$ர்பிதமநோவசநேஹிதார்த$_2$–**
**ப்ராணம் புநாதி ஸ குலம் ந து பூ$_4$ரிமாந: ॥**

**(ஸ்ரீமத் பாகவதம் *7/9/10*)**

''என்னுடைய கருத்தில், பன்னிரண்டு நற்குணங்களைப் பெற்ற அந்தணன் கூட, கமலநாபனான பகவானுடைய பாதங்களை நினைக்காமலிருந்துவிட்டால், அவனைவிட தன்னுடைய மனம், வாக்கு, செய்கை, செல்வம், உயிர் ஆகியவற்றை பகவானுக்கு அர்ப்பணம் செய்த சண்டாளன், உயர்ந்தவன். ஏனெனில், அவன் தன்னுடைய குலத்தையே புனிதப்படுத்திவிடுகிறான். ஆனால், தன் பெருமையில் அகங்காரம் கொண்டு பகவானை மறந்த பிராமணன், தன்னையும்கூடத் தூய்மை ஆக்கிக் கொள்ள முடியாது.''

**சாண்டாலோऽபி முநே: ச்ரேஷ்டோ விஷ்ணுபக்தி பராயண: ।**
**விஷ்ணுபக்திவிஹீநஸ்து த்விஜோऽபி ச்வபசோऽதம: ॥**

**(பத்ம புராணம்)**

''விஷ்ணு பக்தியில் ஈடுபட்டிருக்கிற சண்டாளன்கூட, ஒரு முனிவரைவிடப் பெரியவன். ஹரிபக்தியில்லாத பிராமணனோ, சண்டாளனைவிடத் தாழ்ந்தவன்.''

**அவைஷ்ணவாத் த்விஜாத் விப்ர**
**சாண்டாலோ வைஷ்ணவோ வர: ।**
**ஸகண: ச்வபசோ முக்தோ**
**ப்ராஹ்மணோ நரகம் வ்ரஜேத் ॥**

**(ப்ரஹ்ம வைவர்த்த புராணம் *11/13*)**

வைஷ்ணவன் அல்லாத பிராமணனைவிட, வைஷ்ணவனான (விஷ்ணு பக்தனான) சண்டாளன் பெரியவன். ஏனெனில் அவன், தன்னுடைய உறவினர்களுடன் உலக பந்தத்திலிருந்து முக்தி அடைந்துவிடுகிறான். அந்த வைஷ்ணவன் அல்லாத பிராமணனோ நரகத்தில் வீழ்ந்து விடுகிறான்.

***ந சூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா: |***
***ஸர்வவர்ணேஷு தே சூத்ரா யே ஹ்யபக்தா ஜநார்தநே ||***

*(மஹாபாரதம்)*

''பகவத் பக்தன் சூத்திரனாக இருந்தால், அவன் சூத்திரனே அல்ல; மிக உயர்ந்தவன். உண்மையில், எந்த வர்ணத்தவனாய் இருந்தாலும் தெய்வபக்தி இல்லாதவனே சூத்திரனாவான்.''

விராட் ஸ்வரூபம் உள்ள பகவானுக்கு பிராமணனை முகமாகவும், க்ஷத்திரியனைக் கையாகவும், வைசியனைத் தொடையாகவும், சூத்திரனைப் பாதங்களாகவும் கூறப்பட்டிருக்கிறது. பிராமணனை முகமாகச் சொல்வதன் கருத்து, அவனிடம் 'ஞானத்தின் மிகுதி இருக்கிறது' என்பதாகும். நான்கு வர்ணத்தவர்களையும் படிக்க வைப்பது, அவர்களுக்கு நல்ல விஷயங்களைச் சொல்லிக் கொடுப்பது, உபதேசம் செய்வது – இதெல்லாம் முகத்திலுள்ள வாயின் வேலை. இந்த நோக்கில்தான் பிராமணர்கள் பெரியவர்கள்.

க்ஷத்திரியனைக் கை என்று சொல்வதன் கருத்து, அவர்கள் நான்கு வர்ணத்தவரையும் எதிரிகளிடமிருந்து காக்கிறார்கள். காத்தல் முக்கியமாக கைகளின் வேலை. உடலில் சிரங்கு, கொப்பளம் ஏற்பட்டாலும் அல்லது காயம்பட்டாலும் காப்பதற்கு கைகள்தான் வருகின்றன. தன்னைக் காத்துக் கொள்ள எதிரியை அடிக்கவும் கைகள் பயன்படுகின்றன. மனிதன் கீழே விழுந்தால் முதலில் கையைத்தான் ஊன்றுகிறான். அரசாங்கம் கெட்டுவிட்டால், மனிதனின் சொத்து முதலியவற்றைக் காப்பது எல்லா வர்ணங்களுக்குமே தர்மம் என்றாலும், க்ஷத்திரியன்தான் கையாகிக் காக்கிறான்.

வைசியனை நடுபாகமாகச் சொல்வதன் காரணம் வயிற்றில் உணவு, தண்ணீர், மருந்து முதலியவற்றை இட்டால், உடல் முழுமைக்கும் உணவும் மருந்தும் பரவுகின்றன. எங்கேயாவது பொருள் தேவைப்பட்டால், கொண்டு வந்து கொடுப்பது வைசியனின் வேலை. வயிற்றுக்கு இடுகின்ற உணவு முழு உடலுக்கும் சேர்வதுடன் வயிற்றுக்கும் பலன் கிடைக்கிறது. மனிதன் தன் வயிற்றுக்கு மட்டும் என்று உணவு உண்ண முடியாது. அதே போல் வைசியன், உலகம் முழுமைக்குமாக பொருள் சேர்க்கிறான்; தனக்காக மட்டுமல்ல. அவன் பிராமணனுக்குத் தானம் கொடுக்கிறான். க்ஷத்திரியர்களுக்கு (அரசாங்கத்திற்கு) வரி கொடுக்கிறான். தன்னையும் வளர்த்துக் கொள்கிறான். சூத்திரனுக்கு (தொழிலாளிக்கு)க் கூலி கொடுக்கிறான். இவ்விதம் அவன் எல்லோரையும் காக்கிறான். அவ்வாறு அவன் சேர்க்காது போனால், அதாவது உழவு, பசுப் பாதுகாப்பு, வியாபாரம் முதலியன செய்யாதுபோனால் தானம், வரி முதலியவற்றை எப்படிக் கொடுப்பான்?

சூத்திரனை பாதங்கள் என்று கூறுவதன் காரணம், கால்கள் மனிதனுடைய உடலைத் தூக்கித் திரிகின்றன. அதைப் போல் சூத்திரனும், இந்த சமூகமான உடலுக்குச் சேவை செய்கிறான்.

இவ்விதம் தொண்டுகளின் ஆதாரத்திலேயே நான்கு வர்ணங்களும் இயங்குகின்றன. சூத்திரன், தன் தொண்டு வேலையின் மூலம் எல்லோருடைய தேவையையும் பூர்த்தி செய்கின்றான்.

மேலே சொன்ன அறிவு விளக்கத்தில் கவனிக்க வேண்டியது ஒன்றுண்டு. கீதையில், நான்கு வர்ணங்களுக்கும் இயற்கையாக, தாமே நடக்கக்கூடிய கர்மங்களைப் பற்றிய வர்ணனை இருக்கிறது. அவற்றைச் செய்வதில் தனியாக பெரும் கஷ்டப்பட வேண்டியதில்லை. ஆனால், நான்கு வர்ணங்களுக்கு என்று வேறு சில கர்மங்களும் உண்டு. அவற்றை ஸ்மிருதி கிரந்தங்களில் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டும். அவற்றிற்கு ஏற்றவாறு நடந்து கொள்ள வேண்டும்.

தஸ்மாச்ச₂ாஸ்த்ரம் ப்ரமாணம் தே
கார்யாகார்யவ்யவஸ்தி₂தௌ ।
க்ஞாத்வா ஶாஸ்த்ரவித₄ானோக்தம்
கர்ம கர்துமிஹார்ஹஸி ॥

**(ஸ்ரீமத் பகவத்கீதை 16/24)**

''ஆகவே, உனக்கு செய்யத்தக்கது, தகாதது என்று நிர்ணயிப்பதில் சாஸ்திரம்தான் சான்றாகும். (இவ்வாறு) அறிந்து (நீ) இவ்வுலகில் சாஸ்திர விதிப்படி கடமைக்குரிய செயல்களைச் செய்வதற்கு தகுதியானவன். (சாஸ்திர விதிக்குட்பட்டுச் செயல்களைச் செய்யவேண்டும்.)''

இன்று நான்கு வர்ணங்களுக்கிடையேயும் குழப்பம் வந்து விட்டது. இந்த நிலையிலும்கூட, நான்கு வர்ணத்தவருடைய சமுதாயங்கள் ஒன்றாய் சேர்த்து, பிறகு குணப்படி தனித்தனி சமுதாயங்களாகப் பார்த்தோமானால், பிராமண சமுதாயத்தில் மன அடக்கம், புலனடக்கம் முதலிய குணங்கள் அதிகமாகக் காணப்படும். மற்ற சமுதாயங்களில் அவ்வளவு காணப்படாது. அதேபோல வீரர்கள் சமுதாயத்தில் சூரத்தனம், பொலிவு முதலியன எவ்வளவு அதிகமாகக் காணப்படுகிறதோ, அவ்வளவு அதிகமாக மற்ற மூன்று சமுதாயத்தினரிடையே காணக் கிடைக்காது. வைசிய சமுதாயத்தில் வியாபாரம் செய்தல், பணத்தைச் சம்பாதித்தல், அதை சரியான நிலையில் நிறுத்தி வைத்தல் போன்ற திறமைகள் எவ்வளவு அதிகமாகக் காணப்படுகின்றனவோ, அவ்வளவு பிராமண, க்ஷத்திரிய, வேளாள சமுதாயத்தில் காண முடியாது. சூத்திர சமுதாயத்தில் பிறருக்கு உழைக்கும் பிரவிருத்தி (செயல்) அதிகமாக இருக்கும். அது மற்ற மூன்று சமுதாயத்தினரிடையேயும் அவ்வளவு அதிகமிருக்காது.

இங்கு கூறுவது என்னவென்றால், இன்று வர்ணங்கள் தங்கள் எல்லையைத் தாண்டித் தாறுமாறாகக் குழம்பியிருந்தாலும்கூட, அவரவர்களின் இயல்பான கர்மங்கள் அவரவர் சமுதாயத்தில் சிறப்பாகவே காணப்படுகின்றன. தனி மனிதனிடத்தில் பார்க்க முடியாது போனாலும், சமுதாயங்களை எடுத்துப் பார்த்தால், இந்தப் பாகுபாடு ஒத்து வருவதைக் காண முடியும்.

சாஸ்திரங்களில் ஆழ்ந்த உண்மையைத் தெரிந்து கொள்ள முடியாதவர்கள், 'பிராமணன் கையில் பேனா இருந்தது. அதன் வலிவால் பிராமணன் சிறந்தவன் என்று எழுதிக் கருத்தைப் பரப்பிவிட்டான்' என்று கூறுகிறார்கள். அரசாளுகின்ற (க்ஷத்திரியன்) ஒருவன் பிராமணர்களைப் பார்த்து, ''ஐயா! நாங்கள் ஒன்றுமில்லையா?'' என்று கேட்டான். பிராமணர்கள் கூறினார்கள்— ''அப்படி அல்ல. நீங்கள் இரண்டாவது இடத்திலிருக்கிறீர்கள்.'' அதேவிதமாக, ''நாங்கள் இல்லாமல் உங்களுக்கு வாழ்வு ஏது?'' என்று கேட்ட வைசியர்களிடம், ''உங்களுக்கு மூன்றாவது இடம்'' என்றார்கள். அரசோ, பணமோ இல்லாத மக்கள் (சூத்திரர்கள்) முன்னேறத் தொடங்கிய பொழுது, பிராமணர்கள் அவர்களிடம், ''உங்கள் தலையெழுத்தில் அரசோ, பணமோ கிடையாது. ஆகவே, நீங்கள் இந்த பிராமணர்–க்ஷத்திரியர்–வைசியர்களுக்குத் தொண்டு புரியுங்கள். உங்களுக்கு நான்காவது இடம்.''

இவ்விதம் எல்லோரையும் ஏமாற்றி, வித்தை, அரசு, பணம் – இவற்றின் பலத்தினால் ஒன்றாய் சேர்ந்து கொண்டு நான்காவது வர்ணத்தவரைக் காலின் கீழ் நசுக்கிவிட்டார்கள். இது எழுதியவர்களுடைய சுயநலம், அகம்பாவம் – இவ்விதம் சாஸ்திர ரஹஸ்யம் தெரியாதவர்கள் கூறுகிறார்கள்.

உண்மையில், 'பிராமணர்கள் அனைவரையும்விட மேன்மையானவர்கள்' என்று பிராமணர்கள், தங்கள் தர்மத்தைக் காப்பாற்றிக் கொள்ள என்று எழுதவில்லை. தாங்கள் சௌகரியமாக இருக்க வேண்டும்; சொத்து, சுகம் சேர்த்துக் கொண்டு மகிழ்ச்சியில் திளைக்க வேண்டும் என்று அவர்கள் எழுதவில்லை. ஆனால் எழுதப்பட்டிருப்பது என்ன? பிராமணர்கள் யாகம் செய்ய வேண்டும்; கஷ்டத்தைச் சகிக்க வேண்டும்; தவத்தொழிலில் ஈடுபட வேண்டும்; குடும்பத்தில் இருந்து கொண்டே பணம் சேர்க்கக் கூடாது; உணவுப்பொருள்களையும் (தானியத்தையும்) குறைவாகவே வைத்திருக்க வேண்டும்; ஒரு பானை நெல்லுக்கு மேல் வைத்துக் கொள்ளக் கூடாது. அதாவது 'கும்பி தானியம்' இருக்க வேண்டும்; உலக

போகங்களில் பற்று வைக்கக் கூடாது; வாழ்க்கை நடத்த யாரிடமாவது தானம் வாங்கினாலும், அதை ஹோமம், ஜபம், பாடம் (சாஸ்திரத்தை உரத்த குரலில் படிப்பது) முதலிய வேலைகளைச் செய்துவிட்டே பெற வேண்டும். பசுவை தானமாகப் பெற்றால், அதற்குப் பிராயச்சித்தம் செய்ய வேண்டும்.

ஒரு பிராமணனைச் சிராத்தத்திற்கு வரிப்பது என்றால், சிராத்த திவசத்திற்கு முதல் நாளே கூறிவிட வேண்டும். அவ்வந்தணன் சிராத்தம் செய்பவனுடைய பித்ருக்களைத் தனக்குள்ளே அழைத்து, அந்த இரவில் மிகவும் கட்டுப்பாடாக விரதத்துடன் இருப்பான். மறுநாள், யஜமானுடைய பித்ருக்களுக்காகக் கொடுக்கப்படுகிற பிண்டதானம், தர்ப்பணம் முதலியவற்றை விதிப்படிச் செய்விக்க வேண்டும். அதற்குப் பிறகே அங்கே போஜனம் செய்ய வேண்டும். சிராத்தம் செய்வதற்கு ஒரு யஜமானனுக்குத்தான் ஒத்துக் கொள்ள வேண்டும். ஒரு வீட்டில்தான் ஒத்துக் கொள்ள வேண்டும். திவசச் சாப்பாடு சாப்பிட்ட பிறகு, காயத்ரி ஜபம் முதலியன செய்து, தன்னைச் சுத்தமாக்கிக் கொள்ள வேண்டும். தானம் வாங்குவதும், திவசத்தில் சாப்பிடுவதும்கூட பிராமணர்களுக்குச் சிறந்த காரியமாக விதிக்கப்படவில்லை. பிராமணனுக்குரிய சிறந்த தர்மம் தியாகத்தில் இருக்கிறது. அவன் திவசத்தில் சாப்பிடுவதும், தட்சணை வாங்கிக் கொள்வதும்கூட யஜமானனின் பித்ருக்களுடைய நன்மைக்காகத்தான்; சுயநலத்திற்காக அல்ல. இதுவும் அவன் செய்யும் தியாகமே.

**ருதாம்ருதாப்யாம் ஜீவேத்து ம்ருதேந ப்ரம்ருதேந வா ।**
**ஸத்யாந்ருதாப்யாமபி வா ந ச்வவ்ருத்யா கதாசந ॥**

பிராமணர்கள், தங்கள் வாழ்க்கை செலவு பின்வரும் ஐந்து வகை விருத்திகளாக அமைத்து இருக்கிறார்கள். அவை ரிதம், அம்ருதம், ம்ருதம், ஸத்யாந்ருதம், ப்ரம்ருதம் என்பவையாகும்.

1. 'ரித விருத்தி' மிகவும் உயர்ந்ததாகக் கருதப்படுகிறது. இதை 'சிலோஞ்ச அல்லது கபோத விருத்தி' என்றும்

கூறுகிறார்கள். கபோதம் என்றால் புறா என்று அர்த்தம். உழவர்கள் வயலில் நெல் அறுத்து, வீட்டிற்கு எடுத்துச் செல்வார்கள். அதற்கு பிறகு கீழே விழுந்து கிடக்கின்ற தானியங்கள் 'பூதேவர்கள்' என்று கூறப்படும் பிராமணர்களுக்கு உரியது. அதைச் சேகரித்து, அதை கொண்டு வாழ்கின்ற வாழ்க்கைக்கு 'சிலோஞ்ச விருத்தி' என்று பெயர். தானியக் கடைகளில் தானியம் நிறுக்கும்பொழுது கீழே சிதறும் தானியங்கள் பிராமணர்களுக்குரியவை. அவற்றைச் சேகரித்துக் கொண்டு வந்து வாழ்க்கை நடத்துவது 'கபோத விருத்தி' ஆகும்.

2. வாய் திறந்து கேட்காமலும் அல்லது கையை நீட்டி அடையாளம் காட்டாமலும் யாராவது யஜமானன் கொண்டு வந்து கொடுக்கும் பொழுது, வாழ்க்கைக்குத் தேவையான அளவு பொருளைப் பெற்று வாழ்வது 'அம்ருத விருத்தி'. இதை 'அயாசித விருத்தி' (கேட்காமலேயே கிடைத்ததைக் கொண்டு வாழுதல்) என்றும் கூறுவார்கள்.

3. காலையில் எழுந்து கிராமத்திற்குள் சென்று, மக்களுக்கு வாரம், திதி, முகூர்த்தத்தைக் கூறிவிட்டு, பிச்சையாகக் கிடைப்பதைக் கொண்டு வாழ்வது 'ம்ருத விருத்தி' ஆகும்.

4. வியாபாரம் செய்து வாழ்க்கை நடத்துவது 'ஸத்யாந்ருத விருத்தி'.

5. மேலே கூறிய நான்கு வகைகளில் ஒன்றிலாவது வாழ முடியாமல் போனால் பயிரிட்டு வாழலாம். ஆனால், அதை கடுமையான விதிகளுக்குட்பட்டே செய்ய வேண்டும். ஓர் எருதை வைத்துக் கொண்டு உழக் கூடாது; வெயிலில் உழக் கூடாது என்று இப்படி பல கட்டுப்பாடுகள் உண்டு. இதை 'ப்ரம்ருத விருத்தி' என்கின்றோம்.

மேலே சொன்ன முறைகளில் ஏதாவது ஒரு விருத்தியை ஏற்றுக் கொண்டு, அதில் பஞ்சமகாயக்ஞங்களையும், விருந்தோம்பலையும் செய்துவிட்டு, வேள்வியில் மிச்சமாக எது மிஞ்சுமோ, அதைப் பிரசாதமாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இவை தவிர 'ச்வான விருத்தி' (நாய் வாழ்க்கை) அல்லது 'சேவா விருத்தி' முறையைக் கொண்டு வாழக் கூடாது. ***'ந ச்வவ்ருத்யா கதாசந' (மநுஸ்ம்ருதி 4/44)***

**ஸேவா ச்வவ்ருத்திராக்யாதா தஸ்மாத்தாம் பரிவர்ஜயேத் ।**
***(மநுஸ்ம்ருதி 4/6)***

''உண்மையில் சேவா விருத்திதான் பிராமணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் தடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால், சேவையை அல்ல.'' தாய்–தந்தையைப் போல் இருந்து கொண்டு, அவர்கள் தாழ்விலும் தாழ்ந்த வர்ணத்திற்கு மிகவும் மட்டமான சேவையைக்கூடச் செய்யலாம். உள்ளபடி தாழ்ந்த மக்களுக்குச் சேவை செய்வதில், அவர்களுக்குப் பெருமை உண்டு. எனவே, விருத்தியைத்தான் மனுஸ்ம்ருதி இழிவாகப் பேசுகிறது. கௌரவம், பெருமை, பொருள் சம்பாதித்தல் முதலிய சுயநலன்களுக்காகச் சேவை செய்வதுதான் இழிவு. சுயநலத்தை விட்டுச் சேவை செய்வதை இழிவாகப் பேசப்படவில்லை.

ஸ்ரீமத் பகவத்கீதையில் பிராமணர்கள் ஒன்பது வகை தர்மங்களைக் காக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. அவற்றில் ஒன்றுகூட, வாழ்க்கைக்குப் பொருள் ஈட்டுகிற தர்மமாக இல்லை. க்ஷத்திரியனுக்குக் கூறப்பட்ட ஏழு தர்மங்களில் சண்டையிடுதலும் ஆட்சிபுரிதலுமான இரண்டு தர்மங்கள் வாழ்க்கைக்கு பொருள் தேடும் தர்மங்கள். அதாவது, அவற்றைச் செய்து வாழ்க்கைக்குக் கொஞ்சம் பணம் சேர்த்துவிடலாம். வைசியனுக்கு மூன்று தர்மங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவை பயிரிடுதல், பசு வளர்த்தல், வியாபாரம். இந்த மூன்றுமே வாழ்க்கைக்குப் பொருள் தேடுதல்தான். சூத்திரர்களுக்கோ சேவையே தர்மமாகக் கூறப்பட்டிருக்கிறது. அதுதான் அவர்களுடைய முழு பிழைப்பு. மேலும், அவர்களுக்கு உணவு, வாழ்க்கை முறை முதலியவற்றில் சலுகைகள் அதிகம் இருக்கின்றன.

பகவான் கீதையில், ***'ஸ்வே ஸ்வே கர்மண்யபி$_4$ரத: ஸம்ஸித்$_3$தி$_4$ம் லப$_4$தே நர: ।' (கீதை 18/45)*** என்றெல்லாம்

கூறும்பொழுது ஒரு விசித்திர உண்மையைக் குறிக்கிறார். சமம், தமம் முதலிய ஒன்பது தர்மங்களை பாலனம் செய்வதால், பிராமணனுக்கு எந்த நன்மை ஏற்படுகிறதோ, அதே நன்மை அல்லது புண்ணியமானது சூரத்தனம், தேஜஸ் முதலிய ஏழு தர்மங்களைக் காக்கும் க்ஷத்திரியனுக்கும் கிடைத்துவிடுகிறது. பயிரிடுதல், பசு வளர்த்தல், வியாபாரம் முதலியவற்றைச் செய்கின்ற வைசியனுக்கும் அதே புண்ணியம் கிடைக்கிறது. சேவை மட்டுமே செய்கின்ற சூத்திரனுக்கும் அதே புண்ணியம் அல்லது நன்மை கிடைக்கிறது.

மேலே பகவான், இன்னும் ஒரு சிறப்புக் கருத்துள்ள உண்மையையும் கூறியிருக்கிறார். அதாவது பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் ஆகிய நால்வருமே, தங்களுடைய வர்ணத்திற்குரிய கர்மங்களின் மூலம் பரமாத்மாவைப் பூஜித்து, பரம சித்தியை அடைந்து விடுகிறார்கள். ***'ஸ்வகர்மணா தமப்$_4$யர்ச்ய ஸித்$_3$தி$_4$ம் விந்த$_3$தி மாநவ: ॥' (கீதை 18/46)***. உண்மையில் புண்ணியம் அல்லது நன்மை, வர்ணத்திற்குரிய செயல்களைச் செய்வதால் ஏற்படுவதில்லை. ஆனால், பற்றற்ற மனம் கொண்டு, அவற்றைப் பூஜையாய் செய்தால்தான் நன்மை ஏற்படுகிறது. சூத்திரனுடைய வேலையோ இயல்பாகவே தொண்டுத் தன்மை உடையது. அதாவது, வேலையே பூஜையாகி விடுகிறது. அவ்விதத்தில் வேலையும் பூஜையாகிறது. அதையே பூஜையாகவும் செய்யும் பொழுது, அதன் பூஜைச் சிறப்பு இரண்டு மடங்காகி விடுகிறது. இதனால், அவனுக்கு நற்கதி மிக விரைவில் கிட்டிவிடும். அவனுக்கு எவ்வளவு விரைவில் கிடைக்கிறதோ, அவ்வளவு விரைவில் பிராமணர்களுக்கோ, மற்றவர்களுக்கோ கிடைக்காது.

சாஸ்திரக்காரர்கள் மனிதனை முன்னேற்றுகின்ற விஷயத்தில் தாழ்ந்தவர்களிடத்தில் அதிக அன்பு காட்டியிருக்கிறார்கள். ஏனெனில், சிறியவர்கள் அன்புக்குப் பாத்திரமானவர்கள்; பெரியவர்கள் அதிகாரத்திற்குரியவர்கள். பெரியவர்களுக்கு கவலையும் சிந்தனையும் பாரமாக இருக்கின்றன. ஆனால்,

சிறியவன் மேல் ஒரு சுமையும் இல்லை. சூத்திரனுக்கு பாரமற்ற வாழ்க்கை முறை காட்டப்பட்டிருக்கிறது. அவனுக்கு அன்பும் தரப்பட்டிருக்கிறது.

கவனித்துப் பார்த்தோமானால் உண்மையில் வர்ண–ஆசிரம நிலைகளில் எவன் எவ்வளவு உயர்ந்த படியில் இருக்கிறானோ, அவனுக்கென்று சாஸ்திரங்கள் விதித்த நியமங்களும் அவ்வளவு கடுமையாக இருக்கின்றன. அந்த நியமங்களை சாங்கோபாங்கமாக (எல்லாவித அங்கங்களுடன்) காப்பாற்றும் பொழுது துன்பம் அதிகமாகிறது. கீழ்ப்படியில் இருப்பவனுக்குப் பரம்பொருளை அடைதல் மிகவும் எளிதாகக் கிட்டிவிடுகிறது.

விஷ்ணு புராணத்தில் ஒரு கதை வருகிறது. ஒரு முறை அநேக ரிஷிகளும் முனிவர்களும் சேர்ந்து உயர்வை நிர்ணயம் செய்வதற்காக, வேதவியாச பகவானிடம் சென்றார்கள். வியாசர் அவர்களையெல்லாம் மரியாதையாக உட்கார வைத்துவிட்டுக் கங்கையில் நீராடச் சென்றுவிட்டார். கங்கையில் நீராடும்போது அவர், ''ஏ கலியுகமே! நீ கொடுத்து வைத்தவன்'' என்று மூன்று முறை கூறினார். மீண்டும் ''பெண்களே! நீங்கள் கொடுத்து வைத்தவர்கள்'' என்று மூன்று முறை கூறினார். மறுபடியும் ''சூத்திரர்களே! நீங்கள் கொடுத்து வைத்தவர்கள்'' என்று மூன்று முறை கூறினார். பிறகு நீராட்டத்தை முடித்துவிட்டு முனிவர்களிடம் வந்தார். முனிவர்கள் அவரிடம், ''பெரியீர்! தாங்கள் கலியுகத்தையும் பெண்களையும் சூத்திரர்களையும் பாராட்டி வந்தனம் கூறினீர்களே, ஏன்?'' என்று கேட்டார்கள். வேதவியாசர், ''கலியுகத்தில் தங்கள் கடமையைக் காப்பாற்றும் பெண்களுக்கும் சூத்திரர்களுக்கும் நற்கதி விரைவாகவும் எளிதாகவும் கிடைத்துவிடுகிறது. அதனால், அவர்களுக்கு வந்தனம் செலுத்தினேன்'' என்றார்.

இங்கே நினைவில் கொள்ள வேண்டிய ஒரு செய்தி இருக்கிறது. சுயநலத்திற்காக வேலை செய்கிறவன் சமூகத்திலும் உலகத்திலும் மரியாதைக்குரியவனாக இருப்பதில்லை. சமூகம் என்ன? வீட்டில்கூட எவன் சாப்பிடுவதிலும், வயிற்றை

நிரப்புவதிலும் அதிக சுயநலம் கொண்டவனாக இருக்கின்றானோ, அவனை மற்றவர்கள் இகழ்கிறார்கள். பிராமணர்கள் சுயநலத்திற்காகத் தங்கள் பெருமையைத் தாங்களே எங்கும் கூறுவதில்லை. அவர்கள் பிராமணர்களுக்குத் தியாகத்தையே கூறியிருக்கிறார்கள். சத்துவ குணம் உள்ள மனிதர்கள் தங்களைத் தாங்களே புகழ்ந்து கொள்வதில்லை. ஆனால், மற்றவர்களைப் புகழ்வார்கள், பாராட்டுவார்கள். தாத்பரியம் என்னவென்றால் பிராமணர்கள், தங்கள் சுயநலத்தையும் கர்வத்தையும் எப்பொழுதும் கொண்டதில்லை; அப்படிக் கூறுவதுமில்லை. அப்படிச் செய்திருந்தால் இவ்வளவு மரியாதைக்குரியவர்களாக இருந்திருக்க மாட்டார்கள். உலகத்திலும் சாஸ்திரங்களிலும் பாராட்டப்பட்டிருக்க மாட்டார்கள். அவர்களுக்குக் கிடைக்கும் மரியாதை, அவர்களுடைய தியாகத்தின் காரணமாகவே கிடைத்த ஒன்று.

மனிதன், சாஸ்திரங்களை ஆழ்ந்து படித்துச் சிந்தித்து, மேலே கூறப்பட்ட கருத்துக்களைப் புரிந்து கொள்ள வேண்டும். ரிஷிகள், முனிவர்கள், சாஸ்திரக்காரர்கள்மீது தவறான குற்றச்சாட்டைக் கூறாமல், பெரும் பாவத்திலிருந்து தப்ப வேண்டும். மனித உடல் கடைத்தேற்றத்திற்காகக் கிடைத்திருக்கிறது. அதை அடைந்த ஒருவன், வீழ்ச்சி அடைவதற்காக முயலக்கூடாது.

உயர்ந்த, தாழ்ந்த வர்ணங்களில் உயிர்களுக்கு ஏற்படும் பிறவி, முக்கியமாக அவர்கள் குணங்கள், கர்மங்களுக்கு ஏற்றவாறு அமைகிறது.

***சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் கு$_3$ணகர்மவிப$_4$ாக$_3$ஶ: ।***
***(ஶ்ரீமத் பகவத்கீதை 4/13)***

ஆனாலும் கடனுக்குப் பின்விளைவாக அல்லது சாபம், வரன், சேர்க்கை முதலிய தனித்த காரணங்களினாலும், உயர்ந்த அல்லது தாழ்ந்த வர்ணங்களில் பிறவி ஏற்படலாம். அங்கே பிறந்தும்கூட, அவர்கள் தங்களுடைய முந்தைய சுபாவத்திற்கேற்றவாறே நடந்து கொள்கிறார்கள். உயர்ந்த

ஜாதியில் பிறந்தவன்கூட மட்டமான செயல்களைப் புரிவதற்கு இதுதான் காரணம்.

† துந்துகாரி முதலியவர்கள் இதற்கு உதாரணம். தாழ்ந்த வர்ணத்தில் பிறந்தும் மகாபுருஷர்களாய் வாழ்ந்தவர்கள் விதுரர், கபீர், ரைதாஸ். இன்று சமூகத்தில் ஜாதி, குலபரம்பரை, சமாஜம், தனி மனிதன் – இந்த எல்லோருடைய நிலையிலும் கூட சாஸ்திரத்திற்கு எதிர்மாறான குற்றங்கள் வந்திருக்கின்றன. விவேக விசாரம், ஸத்ஸங்கம், ஸ்வாத்யாயம் முதலியவைகளின் மூலம் அந்தக் குற்றங்களை விலக்கிவிட்டு, தெளிவு, தூய்மை முதலியவற்றைக் கொண்டுவர வேண்டும். அப்போதுதான் மனிதப்பிறவியின் குறிக்கோள் சித்தி பெற முடியும்.

***(ஸ்ரீமத் பகவத்கீதை 18/44–ன் விரிவுரையிலிருந்து)***



# தங்கள் கர்மங்களின் மூலம் ஈசுவரன் வழிபாடு

***அத்யாபநமத்யயநம் யஜநம் யாஜநம் ததா ।***
***தாநம் ப்ரதிக்ரஹம் சைவ ப்ராஹ்மணாநாமகல்பயத் ॥***

***(மநுஸ்ம்ருதி 1/88)***

மனுஸ்ம்ருதியில், பிராமணர்களுக்கு அறுவகைக் கர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவை படித்தல், படிப்பித்தல், வேள்வி செய்தல், வேள்வி செய்வித்தல், தானம் பெறுதல், தானம் கொடுத்தல்.

† துந்துகாரியினது கதை ஸ்ரீமத் பாகவத மாஹாத்ம்யத்தில் காணக் கிடைக்கிறது. இவன் பணத்தாசை பிடித்துத் தாய்–தந்தையரைத் துரத்திவிட்டு, வீட்டில் ஐந்து வேசிகளுடன் வாழத் தலைப்படுகிறான். அவர்களை மகிழ்விக்கத் திருடிப் பொருள் சேர்க்கிறான். பேராசை பிடித்த அவர்களாலேயே கொல்லப்பட்டுத் துர்மரணம் அடைகிறான். மகாத்மாவான கோகர்ணரால் ஸ்ரீமத் பாகவத ஸப்தாஹத்தின் மூலம் அவன் முக்தி பெறுகிறான்.

இவற்றில் படிப்பித்தல், வேள்வி செய்வித்தல், தானம் பெறுதல் – இவை மூன்றும் வாழ்க்கைச் செலவுக்காக. படித்தல், வேள்வி செய்தல், தானம் கொடுத்தல் – இவை மூன்றும் அவர்களுக்குரிய கடமைகள். மேலே சொன்ன ஆறு சாஸ்திர நியதமான கர்மங்கள்; சமம், தமம் முதலிய ஒன்பது வகை இயல்பான கர்மங்கள்; மேலும் உணவு உண்ணுதல், எழுந்திருத்தல், உட்காருதல் ஆகிய அனைத்து வேலைகள் ஆகிய இவைகளால் பிராமணன், நான்கு வர்ணங்களிலும் பரவி நிற்கும் பரம்பொருளுக்கு வழிபாடு செய்யவேண்டும். உட்கருத்து என்னவெனில், பரமாத்மாவின் கட்டளைப்படி அவரை மகிழ்விக்கவே, ஈசுவர புத்தி கொண்டு பற்றற்ற மனதுடன் எல்லோருக்குமே சேவை செய்ய வேண்டும்.

இவ்விதமே க்ஷத்திரியர்களுக்கு ஐந்து கர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

*ப்ரஜாநாம் ரக்ஷணம் தாநம் இஜ்யாத்யயநமேவ ச ।*
*விஷயேஷ்வப்ரஸக்தி ச் ச க்ஷத்ரியஸ்ய ஸமாஸத: ॥*
***(மநுஸ்ம்ருதி 1/89)***

அவையாவன:– குடிகளைக் காப்பாற்றுதல், தானம் கொடுத்தல், வேள்வி செய்தல், அத்யயனம் (ஓதுதல்) செய்தல், மேலும் போகப் பொருட்களில் பற்று வைக்காதிருத்தல்.

இந்த ஐந்து கர்மங்கள் மற்றும் சௌகரியம், தேஜஸ் முதலிய ஏழு வகை இயற்கையான கர்மங்கள் – இவற்றின் மூலமாகவும், மற்ற எல்லாச் செய்கைகளின் மூலமாகவும், க்ஷத்திரியன் எங்கும் வியாபித்து நிற்கிற பகவானுக்கு பூஜை செய்ய வேண்டும்.

*பசூநாம் ரக்ஷணம் தாநம் இஜ்யாத்யயநமேவ ச ।*
*வணிக்பதம் குஸீதம் ச வை ச் யஸ்ய க்ருஷிமேவ ச ॥*
***(மநுஸ்ம்ருதி 1/90)***

மனுஸ்ம்ருதியில் வைசியர்களுடைய கடமை குறிப்பிடப் பட்டிருக்கிறது. அவையாவன:– வேள்வி, அத்யயனம் செய்தல், தானம் கொடுத்தல், வட்டி வாங்குதல், பசு வளர்த்தல், வியாபாரம் என்ற சாஸ்திரம் சொல்கின்ற இந்தக் கர்மங்களின் மூலமும், இயல்பாக செய்கின்ற செயல்கள் மூலமும் தன் கடமையைச் செய்ய வேண்டும்.

***ஏகமேவ து சூத்ரஸ்ய ப்ரபு: கர்ம ஸமாதிசத் ।***
***ஏதேஷாமேவ வர்ணாநாம் சுச்ரூஷாமநஸூயயா ॥***

***(மநுஸ்ம்ருதி 1/91)***

சூத்திரன், சாஸ்திரத்தில் கூறப்பட்ட இயல்பான தொண்டின் மூலமாக, எங்கும் வியாபித்திருக்கிற பரமாத்மாவை வழிபட வேண்டும். விளக்கமாகக் கூறினால், சாஸ்திரத்தில் கூறுகின்ற கர்மங்கள்; இயல்பினால் செய்கின்ற கர்மங்கள்; மேலும் உண்ணுதல், குடித்தல், தூங்குதல், விழித்தல் போன்ற எல்லாச் செயல்களின் மூலமாகவும், பகவானுடைய கட்டளைப்படி, அவரைத் திருப்தி செய்விக்க, அவருக்கே அர்ப்பணம் செய்யப்பட்ட பக்தியுடன் பயனில் ஆசையற்ற முறையில் எல்லோருக்கும் சேவை செய்ய வேண்டும்.

சாஸ்திரங்களில் ஒவ்வொரு மனிதனுக்கும் வர்ண– ஆசிரமத்திற்குத் தக்கவாறு கூறப்பட்டிருக்கின்ற கடமைகள் மற்றும் செயல்கள் எல்லாமே, இந்த உலக உருவத்தில் இருக்கிற பரமாத்மாவின் வழிபாடே ஆகும். அதாவது, அவன் செய்கின்ற ஒவ்வொரு செயலும் செயலளவிலேயே பரமாத்மாவின் வழிபாடாகிறது. பீஷ்ம பிதாமகர், அர்ஜுனனுக்குத் தேரோட்டியாக இருந்த கண்ணனுக்குத் தன்னுடைய போர்ச் செயலின் மூலமே அம்புகளால் அர்ச்சனை செய்தார். அவர் எய்த அம்புகளால் கண்ணனின் கவசம் உடைந்தது. அவர் உடலில் காயங்கள் ஏற்பட்டன. விரல்களிலும் சிறுசிறு அம்புகள் பட்டு கடிவாளத்தைப் பிடிப்பதும் கடினமாயிற்று. இப்படி அர்ச்சனை செய்துவிட்டு, இறுதியில் அம்புப் படுக்கையில் படுத்தவாறு பீஷ்ம பிதாமகர், தான் சண்டையில்

அம்புகளால் அர்ச்சனை செய்த பகவானைத் தியானிக்கிறார். போரில் என்னுடைய கூரிய பாணங்களால் எவருடைய கவசம் உடைந்ததோ, தோல் கிழிந்ததோ, குதிரைகளின் குளம்புகளிலிருந்து எழும்பிய தூசி, யாருடைய அழகான சுருண்ட கேசங்களில் ஒட்டிக் கொண்டிருக்கிறதோ, அந்த அம்புகளால் அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ணனிடத்திலேயே என்னுடைய மனமும் புத்தியும் லயித்திருக்கட்டும்.

*யுதி$_4$ துரக$_3$ரஜோவிதூ$_4$ம்ரவிஷ்வக்–*
*கசலுலிதஶ்ரமவார்யலங்க்ருதாஸ்யே ।*
*மம நிஶிதஶரைர்விபி$_4$த்$_3$யமாந–*
*த்வசி விலஸத்கவசேஸ்து க்ருஷ்ண ஆத்மா ॥*
***(ஸ்ரீமத் பாகவதம் 1/9/34)***

லௌகிக, பரமார்த்திக கர்மங்களின் மூலம் பரமாத்மாவுக்கு வழிபாடு செய்யட்டும். ஆனால், அந்தச் செயல்களிலோ அல்லது அந்தச் செயல்களைச் செய்வதற்குரிய சாதனங்களிலோ 'என்னுடையது' என்ற எண்ணமோ, பற்றோ இருக்கக்கூடாது. ஏனென்றால், எந்தப் பொருளுடனாவது அல்லது செயலுடனாவது 'என்னுடையது' என்கின்ற பற்று ஏற்பட்டுவிட்டால், அந்தப் பொருட்கள் தூய்மையை இழந்து, வழிபாட்டுப் பொருளாக ஆக முடியாமல் போய் விடுகிறது. தூய்மையற்ற பழம், பூ – இவற்றை பகவானுக்கு அர்ப்பணிக்கக் கூடாது. அதனால்தான் ராமசரிதமானஸத்தில் துளசிதாசர், ***'மமதா மல ஜரி ஜாஇ' (ஸ்ரீராமசரிதமானஸம் 7/117க)*** என்று கூறுகிறார். 'மமதை என்பது மலம். அது எரிந்து போகட்டும்.'

என்னிடத்தில் இருப்பது எல்லாம் எங்கும் வியாபித்துள்ள பரமாத்மாவினுடையதுதான். நான் ஒரு நிமித்தமாக நின்று, அவர் தந்த ஆற்றலைக் கொண்டு, அவருக்கு வழிபாடு செய்யவேண்டும். இந்த உணர்வுடன் எதைச் செய்தாலும், அது எல்லாமே பரமாத்மாவின் வழிபாடு ஆகிவிடும். இதற்கு மாறாக செயல்கள், பொருள்கள் – இவற்றை மனிதன் எவ்வளவு அதிகம் தன்னுடையது என்று எண்ணுகிறானோ, அவ்வளவு

அதிகம் அந்தச் செய்கைகளும் பொருட்களும் தூய்மையிழந்து, பரம்பொருளின் பூஜைக்குத் தகுதியில்லாமல் போய்விடும்.

***(ஸ்ரீமத் பகவத்கீதை 18/46–ன் விரிவுரையிலிருந்து)***



## சமத்துவம் என்பது என்ன?

இக்காலத்தில் சமத்துவத்தைப் பற்றிப் பேச்சு அதிகமாய் இருக்கிறது. எல்லோருடனும் சமத்துவமாகப் பழகு என்று பிரசாரம் செய்யப்படுகிறது. ஆனால் உண்மையில், எதைச் சமத்துவம் என்று கூறுகிறோம்? அது எப்படி வருகிறது? இதை நன்கு தெரிந்துகொள்ளத் தேவையிருக்கிறது.

சமத்துவம் என்பது ஏதோ வேடிக்கையோ, வினோதமோ இல்லை. அது பரமாத்மாவின் உண்மை உருவமாகும். எவர்களது மனம் சமத்துவத்தில் நிலைக்குமோ, அவர்கள் உயிருடன் இருக்கும்பொழுதே உலகை வெற்றி கொள்கிறார்கள். பரப்பிரும்ம உணர்வை இங்கேயே பெற்று விடுகிறார்கள் (கீதை 5/19). பிறருடைய துக்கத்தை நம் துக்கமாக, சுகத்தை நம் சுகமாக உணர்கின்ற நிலையில்தான் இந்தச் சமத்துவம் பெறப்படும். கீதையில் பகவான் கூறுகிறார்—

**ஆத்மௌபம்யேந ஸர்வத்ர**
**ஸமம் பஶ்யதி யோऽர்ஜுந ।**
**ஸுக$_2$ம் வா யதி$_3$ வா து$_3$:க$_2$ம்**
**ஸ யோகீ$_3$ பரமோ மத: ॥**

***(ஸ்ரீமத் பகவத்கீதை 6/32)***

“அர்ஜுனா! எந்த (பக்தன்) தன்னைப் போலவே (உடலின் அடிப்படையில்) எல்லா இடங்களிலும் (என்னை) ஒரே சீராகப் பார்க்கிறானோ, மற்றும் சுகத்தையோ அல்லது துக்கத்தையோ (சீராகப் பார்க்கிறானோ), அவன் சிறந்த யோகியாக மதிக்கப்படுகிறான்.”

உடலில் எந்த அங்கத்தில் வலி ஏற்பட்டாலும், அதைத் தீர்க்கவேண்டும் என்ற ஈடுபாடு, வேகம் ஏற்படுகிறது. அப்படியே வேறு எந்த உயிருக்கும் துக்கமோ, கஷ்டமோ ஏற்பட்டால், அதை நிவர்த்திப்பதற்குத் தீவிரமான விருப்பம் ஏற்பட வேண்டும். அப்பொழுது வருவதே சமத்துவம். கோஸ்வாமி துளசிதாசர் சாதுக்களுடைய அடையாளத்தைக் கூறும்பொழுது, ***'பர து$_3$க$_2$ து$_3$க$_2$ ஸுக$_2$ ஸுக$_2$ தே$_3$கே$_2$ பர'*** ***(ஸ்ரீராமசரிதமானஸம் 7/38–1)*** என்கிறார்.

தன்னுடைய சுகத்தையே பெரிதாக எண்ணித் தீவிர ஆசை கொண்டிருக்கும் வரையில், எவ்வளவு முயன்றாலும் சமத்துவம் வராது. ஆனால், மற்றவருக்கு எப்படி சுகம் கொடுக்கலாம்? நலம் தரலாம்? நாம் என்ன செய்தால் அவர்களுக்குப் பயன் கிடைக்கும்? மங்களம் ஏற்படும்? என்று தீவிரமாகச் சிந்தித்து ஈடுபடத் தொடங்கினால், சமத்துவம் தானே வந்துவிடும். முதலில் இதை தன் வீட்டிலேயே தொடங்க வேண்டும். யாருக்கும் சற்றேனும் துக்கமோ, தொல்லையோ, கெடுதலோ ஏற்படக் கூடாது என்ற எண்ணம் இதயத்தில் ஏற்பட வேண்டும். எனக்கு எவ்வளவு கஷ்டம் நேர்ந்தாலும் சரி, என்னுடைய தந்தை, தாய், மனைவி, குழந்தைகள், சகோதரர்கள், அவர்களின் மனைவிகள் ஆகியோருக்கு நன்மை ஏற்பட வேண்டும். வீட்டிலுள்ளவர்களுக்குச் சௌகரியம் செய்வதால், நம்முடைய இதயத்தில் அமைதி ஏற்படும். இதே நிலையில் நம்முடைய வீட்டிற்கு வெளியிலும் சுகம் தருவோமேயானால், உள்ளத்தில் ஆனந்தத்தின் இனிய அலைகள் எழும்பிவரத் தொடங்கிவிடும். ஆனால், மமதையுடன் சுகம் தரும் வேலைகளைச் செய்தால் நமக்கு முன்னேற்றம் ஏற்படாது. 'நம்முடைய என்கின்ற பற்று (மமதை) இல்லாமல் நன்மை செய்தோமானால் நல்ல பயன் ஏற்படும்.' நம்முடையது என்று தொடங்கினாலும், பிறகு அந்த மமதையை அகற்றி விட்டோமானால், அப்பொழுது ஏற்படும் பயனும் முன் கூறியதற்குச் சமமாக இருக்கும்.

சித்திரகூடத்தில் லட்சுமணன், இராமபிரானுக்கும் ஜானகிக்கும் எப்படி கைங்கரியம் செய்தார்? என்பதை கோஸ்வாமி துளசிதாசர் கூறும்பொழுது,

*ஸேவஹி(ம்) லக$_2$நு ஸீய ரகு$_4$வீரஹி ।*
*ஜிமி அபி$_3$வேகீ புருஷ ஸரீரஹி ॥*

*(ஸ்ரீராமசரிதமானஸம் 2/142/1)*

அதாவது ஓர் அஞ்ஞானி, தன்னுடைய உடலுக்கு எப்படி சேவை செய்கிறானோ, அப்படி லட்சுமணன் இராமபிரானுக்கும் சீதாதேவிக்கும் சேவை செய்தார். தன்னுடைய உடலுக்குச் சேவை செய்து, அதற்கு சுகமூட்டுவது அறிவுடைய செயலன்று. மிருகங்கள்கூட தன்னுடைய உடலுக்கு உழைக்கின்றன. குரங்குக்குக்கூட தன்னுடைய குட்டியிடத்தில் இருக்கின்ற அன்பானது, அந்தக்குட்டி இறந்த பிறகும்கூட அதைத் தூக்கிக் கொண்டு சுற்றுகிற அளவிற்கு அன்பு இருக்கிறது. அது அந்தப் பிணத்தையும் விடுவதில்லை. அதே குரங்கு சாப்பிட ஏதாவது கிடைத்தால் குட்டிக்குக் கொடுக்காமலேயே தானே தின்கிறது. குட்டி தின்ன முயன்றால், அதை அதட்டுகிற அதட்டலில், குட்டி, 'கூகூ' என்று கத்திக் கொண்டு ஓடி விடுகிறது, பாவம். எனவே, பற்று இருக்கிற வரையில் சமத்துவம் வருவது நடக்காத ஒன்று.

யாரிடத்திலிருந்து நாம் எதையும் விரும்பவில்லையோ, அப்படிப்பட்ட மனிதனிடம்கூட, அன்பாக மிக நல்ல முறையில் நடந்து கொண்டு, அவனுக்கு நன்மை செய்யவேண்டும். ஒருவன் வழிதவறித் தவிக்கிறான்; நம்மை வழி கேட்கிறான். அப்பொழுது மிகவும் முகமலர்ச்சியுடன் அவனுக்கு வழி கூற வேண்டும். சிறிது தூரம் அவனுடன் தொடர்ந்து சென்றாலும் நல்லதே. அக்கணம் நம்முடைய உள்ளத்தில் சுகத்தையும் அமைதியையும் முழுமையாக அனுபவிக்க முடியும். வழி தெரிந்தும் சொல்லாமல் போனோமானால் நம் உள்ளத்தில் இன்பம் ஏற்படாது. இச்செயலை எங்கும் அனுபவத்தால் புரிந்து கொள்ளலாம்.

நம்முடைய உள்ளத்தில் அமைதியும் சுகமும் ஏற்பட்டால், அது முன்னேற்றம். தாகம் கொண்டவனைப் பார்த்தால், அவனை அழைத்துத் தண்ணீர் கொடுத்துவிட்டுப் பார்த்தோமேயானால், நம்முடைய உள்ளத்தில் இன்பம் துளிர்க்கும்; சுகம் வரும். இந்தச் சுகம் நமக்கு மங்களம் செய்ய வல்லது. மற்றவர் கெடுதலைக் கண்டு நாம் சுகம் பெற விரும்பினால், இந்தச் சுகம் இழிவடையச் செய்வது. அப்பொழுது இங்கேயும் நன்மை ஏற்படாது; மேலுலகிலும் மேன்மை கிடைக்காது. நாம் சத்சங்கத்திற்கு ஏற்பாடு செய்து, அதைக் கேட்க வருபவர்களுக்கு அமரவும் ஏற்பாடு செய்கிறோம். வருகின்றவர்களை அன்புடன் வாருங்கள், வாருங்கள் என்று அழைத்து, அவர்களைத் தக்க இடத்தில் அமர்த்தவேண்டும். அவர்கள் எங்கு உட்கார்ந்தால் வசதியாக இருக்க முடியும், வசதியாகக் கேட்க முடியும் என்று சிந்தித்து நடந்து கொள்ள வேண்டும். அப்பொழுது நம் இதயத்தில் நாம் உணரும்படி அமைதி ஏற்படும். ஆனால் அதற்குமாறாக, 'அங்கு என்ன செய்கிறீர்கள்? இங்கே உட்காருங்கள், அங்கு போங்கள்' என்றெல்லாம் அதட்டுவது சரியல்ல. செல்வாக்கைக் காட்டிக் கொள்ளலாமே தவிர, மனத்தில் அமைதி இருக்காது. ஏனெனில், நம்முடைய அகம்பாவம் மற்றவரைக் குத்தும், புண்படுத்தும். இப்படியெல்லாம் நடந்து கொண்டு சமத்துவம் வரவேண்டுமென்றால், அது எப்படி வரும்? அது வராது.

*தே ப்ராப்நுவந்தி மாமேவ ஸர்வபூ$_4$தஹிதே ரதா: ||*

***(ஸ்ரீமத் பகவத்கீதை 12/4)***

''எல்லா உயிரினங்களின் நன்மையிலேயே ஈடுபாடு கொண்டவர்களான அவர்களும் என்னையே அடைகிறார்கள்.''

ஏனெனில், பகவான் எல்லா உயிர்களுக்குமே சிறந்த நண்பன் (கீதை 5/29). மிகப்பெரிய ஆஸ்திகனாய் இருந்தாலும் சரி, அல்லது நாஸ்திகனானாலும் சரி, ஈசுவரனின் கட்டளை ஒரே மாதிரிதான் இருக்கும். ஓர் ஆஸ்திகன் பகவானை மிகவும் நம்பி, அவரை அடைய பஜனைகள் முதலிய சாதனைகளைச்

செய்கிறான். மற்றொருவன், பகவான் பெயரையே உலகத்திலிருந்து அழித்துவிட முயலும் நாஸ்திகனாக இருக்கிறான். 'பகவானை நம்புவதால், அவன் காரணமாகவே உலகம் துயரடைகிறது. பகவான் என்று ஒன்றும் கிடையாது' என்று, நாஸ்திகன் பிரசாரமும் செய்கிறான். அந்த நாஸ்திகனுடைய தாகத்தையும் தண்ணீர் தீர்த்து வைக்கிறது. அதே ஜலம் ஆஸ்திகனுடைய தாகத்தையும் தீர்த்து வைக்கிறது. ஜலம், ஒருவனுடைய தாகத்தை நல்ல முறையில் தீர்த்து அமைதி கொடுக்க வேண்டும். மற்றவனுக்குத் தாகத்தைத் தணிக்கக் கூடாது என்று பாகுபாடு செய்வதில்லை. எல்லோருடைய தாகத்தையும் ஒரே மாதிரிதான் அது தீர்த்து வைக்கிறது. இவ்விதமே, சூரியன் எல்லோருக்கும் சமமாக ஒளி தருகிறான். காற்று, பூமி முதலான ஈசுவரன் படைத்த ஒவ்வொரு பொருளுமே எல்லோருக்கும் சமமாகவே பயன் தருகிறது.

உணவு, திருமணம் முதலியவற்றில் ஒரே மாதிரியாக நடந்து கொள்வது என்று சமத்துவத்திற்குப் பொருளல்ல. அப்படிப்பட்ட ஒரே மாதிரி செயல் மிருகங்களிடத்தில் இருக்கும். நாய், உயர் ஜாதியர் வீட்டில் சமையல் அறையில் புகும். அப்போது அது காலைக் கழுவிக் கொண்டு உள்ளே போகாது. அப்படியே ஒரு தாழ்ந்த ஜாதியர் வீட்டிற்குள் புகுந்தாலும் அப்படித்தான் போகும். இதுதான் அதற்கு சமத்துவம். இப்படி நடந்து கொள்வது மனிதனுக்குச் சமத்துவமாகாது. அவனுக்கு இது மிகவும் அபவித்திரமான, அசிங்கமான செயல். சமத்துவத்தின் பொருள்— மற்றவருடைய துக்கத்தை அகற்றிச் சுகத்தைத் தருவதில் இருக்கிறது. இந்தச் சமத்துவ எண்ணத்திலும் சேர்ந்து நடத்தையிலும் தூய்மையிருக்க வேண்டும். நடத்தையில் தூய்மையிருந்தால் உட்புலன்களும் நிர்மலமாக, தூய்மையானதாக ஆகிவிடும். நடத்தை நேர்மையற்றிருந்தால், சேர்ந்து உணவருந்துதல் மூலம் உட்புலன்களும் தூய்மை கெட்டுவிடும்; அமைதி

குலைந்துவிடும். வெளி விவகாரங்களில் மாத்திரம் சமத்துவத்தைக் கொள்வது, சாஸ்திரம் மற்றும் உலக வழக்கு இரண்டுக்குமே விரோதம். இதனால் சமூகத்தில் மோதல்தான் ஏற்படும்.

வர்ணங்களில் பிராமணர்கள் உயர்ந்தவர்கள், சூத்திரர்கள் தாழ்ந்தவர்கள் என்று சாஸ்திரங்களில் சித்தாந்தம் செய்யப் படவில்லை. ஸ்ரீமத் பகவத்கீதை 18/42–ல் பிராமணர்களுக்குப் பின்வரும் ஒன்பது கர்மங்கள் இயல்பானவையாகக் கூறப்பட்டிருக்கின்றன— 1) மனத்தைத் தன்வசத்தில் வைத்துக் கொள்வது, 2) இந்திரியங்களை வசத்தில் வைத்துக் கொள்வது, 3) கடமையான தர்மத்தைச் செய்யும்பொழுது, சந்தோஷத்துடன் கஷ்டத்தைச் சகித்துக் கொள்வது, 4) உடல் முதலியவற்றைத் தூய்மையாக வைத்துக் கொள்வது, 5) மற்றவருடைய குற்றத்தை மன்னிப்பது, 6) தங்களுடைய எண்ணத்தையும் செய்கைகளையும், எளிமையாகவும் நேர்மையாகவும் வைத்திருப்பது, 7) சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்ற ஞானத்தைச் சேகரிப்பது, 8) வேள்வி விதிகளை நன்கு அறிவது, 9) பரமாத்மா, வேதம், சாஸ்திரம், பரலோகம் – இவற்றில் ஆர்வம் கொள்வது.

க்ஷத்திரியனுக்குக் கூறப்பட்டிருக்கிற இயல்பான கர்மங்கள் ஏழு. அவை வீரம், தேஜஸ், தைரியம், ஆளும் திறமை, சண்டையில் புறமுதுகு காட்டாமை, தானம் கொடுத்தல், ஆட்சி புரிதல் (கீதை 18/43). பயிரிடுதல், பசு வளர்த்தல், நேர்மையான வாணிபம் செய்தல் – இந்த மூன்றும் வைசியனுக்கு ஏற்பட்ட இயல்பான கர்மங்கள். சூத்திரனுக்கு இயல்பான கர்மம் ஒன்றுதான். அது மற்ற வர்ணத்தவருக்குத் தொண்டு புரிதல். பிராமணன் உபதேசம் செய்வதன் வாயிலாகவும், க்ஷத்திரியன் காத்தல் மூலமாகவும், வைசியன் பொருட்கள் மூலமாகவும், சூத்திரன் உடலால் உழைத்தும் அனைத்து வர்ணங்களுக்கும் சேவை புரியவேண்டும் (கீதை 18/44). இதனால், மற்றவர்கள் தங்கள் கடமைகளைக்

காப்பதற்கு உழைக்க வேண்டாம் என்பது பொருளல்ல. கடமைகளைச் செய்யும் விஷயத்தில் எல்லோரும் ஒரேவிதமாக உழைக்க வேண்டும். யாரிடத்தில் எந்தவிதமாக ஆற்றல், படிப்பு, பொருள், கலை இருக்கிறதோ, அதைக் கொண்டு அவன் எல்லோருக்கும் தொண்டு புரியவேண்டும். அவர்கள் செயல்களில் உதவி புரியவேண்டும். ஆனால், ஒருவித பேதபாவமும் கொள்ளக் கூடாது. எல்லா வர்ணங்களுக்கும் ஒரே மாதிரி தொண்டு புரிய வேண்டும்.

இன்று வர்ணாசிரமத்தை அழித்துவிட்டுக் கட்சி அமைப்புகள் வந்துவிட்டன. இன்று கட்சிகளுக்கிடையே கட்சி கட்டுவதில் ஏற்படுகின்ற அளவு சண்டை வர்ணாசிரமத்தில் இல்லை. முன்னாளில் மக்கள், நான்கு வர்ணாசிரமங்களுக்கு உள்ள மரியாதையைக் காத்து நடந்து கொண்டிருந்தார்கள்; அமைதியாகவும் வாழ்ந்தார்கள். இன்று வர்ணாசிரம எல்லையை அழித்துவிட்டு, பல கட்சிகளை ஏற்படுத்தியுள்ளார்கள். போராட்டம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. கிராமங்களில் மக்களுக்குக் குடிக்கத் தண்ணீர் கிடைக்கவில்லை. கிணறு இருக்கின்ற நிலத்திற்குரியவன் கூறுகிறான்— ‘‘நீ அந்தக் கட்சிக்கு வாக்களித்தாய். அதனால், இங்கு தண்ணீர் எடுக்கமுடியாது.’’ அம்மா ஒரு கட்சி, அப்பா ஒரு கட்சி, பையன் ஒரு கட்சி. மூவரும் வேறு வேறு கட்சிக்கு வாக்களித்துவிட்டு வீட்டுக்குள்ளே சண்டையிடுகிறார்கள்; பகைமை பாராட்டுகிறார்கள். எவ்வளவு பெரிய கெடுதி விளைந்து கொண்டிருக்கிறது.

சமத்துவம் கொண்டு வரவேண்டுமென்றால் எந்த வர்ண–ஆசிரம–தர்ம–சம்பிரதாய–மதத்தினராய் இருந்தாலும், அவனுடைய துக்கத்தை நீக்கிச் சுகம் தரவேண்டும். அவனுக்கு உண்மையாக உதவ வேண்டும். நீங்கள் ‘இராம, இராம’ என்று கூறலாம். நாங்கள் ‘கிருஷ்ண, கிருஷ்ண’ என்று கூறலாம். நீங்கள் வைஷ்ணவராயிருக்கலாம்; நான் சைவனாக இருக்கலாம். நீங்கள் இஸ்லாமியராக இருக்கலாம்; நாங்கள்

இந்துவாக இருக்கலாம். இது ஒரு மாறுபாடு. ஆனால், இதனால் ஒரு தடங்கலும் ஏற்படாது. தொல்லை எப்பொழுது வருமென்றால், அவர்கள் வேறொரு கட்சிக்காரர்கள். நம்முடைய கட்சியைச் சேர்ந்தவர்கள் அல்ல. அவர்கள் துன்பப்படட்டும். ஆனால், 'எங்கள் கட்சிக்குச் சுகம் வேண்டும்' என்று எண்ணி நடந்து கொள்ளும்போதுதான் தொல்லை வருகிறது. ஆகையினால் மாறுபட்ட வர்ண–ஆசிரமத்தைச் சேர்ந்த எந்த மனிதர்களுக்குக் கஷ்டம் வந்தாலும், அவர்களின் நன்மையைப் பற்றிய சிந்தனை சமமாக இருக்க வேண்டும். அவர்களுக்குச் சுகம் தருவதில், நம்முடைய உள்ளத்தில் எழும் மகிழ்ச்சி ஒரே மாதிரியானதாக இருக்க வேண்டும். உதாரணமாக, பிராமணர்களுக்கும் ஹரிஜனங்களுக்கும் இடையே மோதல். அதில் ஹரிஜனங்கள் தோற்று பிராமணர்கள் ஜயித்தார்கள் என்றால் மனத்தில் சந்தோஷமும், பிராமணர்கள் தோற்று ஹரிஜனங்கள் வென்றால் உள்ளத்தில் துக்கமும் ஏற்படுவது சமத்துவமல்ல. அது விஷமத்தனம். சமம் இல்லாத இப்படிப்பட்ட வேற்றுமை உணர்வு நம்மிடையே இருக்கக் கூடாது. இரு வர்க்கத்தினரையும் பொறுத்தமட்டில் அவர்கள் நலனில், நம்முடைய மனத்தில் சமமான கருத்து ஏற்பட வேண்டும். யாருக்குத் தொந்தரவு ஏற்பட்டாலும், நாம் பொறுத்துக் கொள்ளக் கூடாது. யாருக்கு ஏற்படும் துக்கமும் நம்முடைய மனத்தை ஒரே மாதிரி உறுத்த வேண்டும். பிராமணன் துக்கப்பட்டிருந்தால், அவனுக்குச் சுகம் தரவேண்டும். ஹரிஜனன் கஷ்டப்பட்டால் அவனுக்கும் சுகம் ஏற்படுத்த வேண்டும். உண்மையில், இன்றைய நிலையில் ஹரிஜனங்களுக்கும் சுகம் தேடித் தருவதில் விசேஷ கவனம் செலுத்த வேண்டும். அதற்காக பிராமணனுக்கு ஏற்படும் துக்கத்தை அலட்சியம் செய்துவிடக் கூடாது.

இவ்விதம் வர்ண–ஆசிரம–தர்மங்களைக் கூறி, ஒரு பக்கம் அநீதியான எண்ணத்தை மனத்தில் வளர்க்கக் கூடாது. எல்லோரிடத்திலும் ஒரே மாதிரியாக நன்மை வரும்படி ஏற்றுக்கொள்ள வேண்டும். தாழ்ந்த குடியில் பிறந்தவனை,

நாம் முன்னேற்ற விரும்பினால், அந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்களின் எண்ணத்தையும் நடத்தையையும், தூய்மையாகவும் உயர்ந்ததாகவும் ஆக்கவேண்டும். அவர்களிடம் வசதி குறைவாய் இருந்தால், அதை நிரப்பித் தரவேண்டும். அவர்களுக்கு உதவவேண்டும். அதை விட்டுவிட்டு, அவர்களின் மனத்தில் துவேஷத்தைத் தூண்டிவிடுதல், மற்றவர்களிடம் பொறாமையை எழுப்புதல் ஆகியவை மிகமிகக் கெடுதலான செயலாகும். அது கொலைக்கு ஒத்தது. இந்த உலகத்திலும் பரலோகத்திலும் இழிவைத் தரக்கூடியது. ஏனெனில் பொறாமை, வெறுப்பு, அகம்பாவம் போன்ற குணங்கள் மனிதனைப் பாதாளத்தில் வீழ்ந்துவிடச் செய்யும். இப்படிப்பட்ட எண்ணம் பிராமணர்களிடத்தில் இருந்தால், அவர்களும் வீழ்ச்சி அடைவார்கள். நல்லெண்ணம், நற்குணம், நல்ல நடத்தை முதலியவற்றால்தான் முன்னேற்றம் ஏற்படும்.

எவர்களிடத்தில் உணவு, உடை, இருப்பிடம் முதலிய வாழ்க்கைக்குரிய வசதிகள் குறைவாக இருக்கின்றனவோ, அவர்களுக்குச் சிறப்பாக இந்தப் பொருட்களைத் தரவேண்டும். அவர்களது வர்ணம், ஆசிரமம், தர்மம், சம்பிரதாயம் எதுவாயிருந்தாலும் சரியே. எல்லோரும் சுகமாயிருக்க வேண்டும். எல்லோரும் உடல்நலத்துடன் இருக்க வேண்டும். யாருக்கும் சற்றேனும் துக்கம் ஏற்படக்கூடாது.

*ஸர்வே பவந்து ஸுகிந:*
*ஸர்வே ஸந்து நிராமயா: ।*
*ஸர்வே பத்ராணி பஸ்யந்து*
*மா சச்சித் து:க பாக் பவேத் ॥*

இந்த எண்ணத்தைத் தூண்டுகோலாகக் கொண்டு இயன்றவரை உதவியாக நடந்து கொள்வதுதான் சமத்துவம். அது எல்லா மனிதருக்கும் நலம் பயப்பது.

பிராமணன், சண்டாளன், பசு, யானை, நாய் ஆகியவைகளுடன் சமமாகப் பழகுவது முடியாத காரியம். விவகாரத்தில் மாறுபாடு இருப்பது தவிர்க்க முடியாது.

சாஸ்திரம் அவ்விதம் கூறவுமில்லை; அது தக்கதும் இல்லை; அவ்விதம் செய்யவும் முடியாது. ஏனெனில், வித்தையும் வினயமும் உள்ள பிராமணனைத்தான் பூஜிக்க முடியும்; சண்டாளனைப் பூஜிக்க முடியாது. பசுவின் பாலைத்தான் குடிக்க முடியும்; நாயின் பாலைக் குடிக்க முடியாது. யானை மேல் சவாரி செய்யலாம்; நாயின் மேல் சவாரி செய்ய முடியாது. மேலே கூறிய ஐந்தையும் (பிராமணன், சண்டாளன், பசு, யானை, நாய்) சேர்த்துக் கூறி, பகவான் நமக்கு விளக்க விரும்புவது, விவகார விஷயத்தில் ஒருமைப்பாடு முடியாதென்றாலும், உண்மையில் எல்லாவற்றிடத்துமே பரமாத்ம தத்துவம் பரிபூரணமாக இருக்கிறது என்று உணர வேண்டும். மகா புருஷர்கள் அந்த பரமாத்ம தத்துவத்தையே (*'ஸதா ஸர்வதா'*) எப்பொழுதும் இடையறாது காண்கிறார்கள். அவர்களுடைய பார்வையில் மாறுபாடே தோன்றுவதில்லை.

இங்கே ஓர் ஐயம் எழலாம். பார்வையில் மாறுபாடு இல்லாவிட்டால் விவகாரத்தில் பேதம் எப்படி வரும்? இதற்கு சமாதானம் என்னவென்றால், நம்முடைய உடலிலுள்ள தலை, கால், கை முதலிய எல்லா அங்கங்களையும், நாம் நம்முடையனவாகவே கருதுகிறோம். அவற்றின் நலத்தில் நம் கருத்து அல்லது நோக்கம் சமமாகவே இருக்கிறது என்றாலும், அவைகளின் விவகாரத்தில் நாம் பேதம் காட்டுகிறோம். உதாரணமாக, யார் மேலாவது கால்பட்டுவிட்டால் மன்னிப்புக் கேட்கிறோம்; கை பட்டுவிட்டால் அவ்விதம் கேட்பதில்லை. வணங்க வேண்டுமென்றால் தலையாலும் கைகளாலும் செய்கிறோம்; காலால் செய்வதில்லை. அசுத்தமான இடத்தில் கை பட்டுவிட்டால் கையைக் கழுவுகிறோம்; கை கையோடு பட்டுவிட்டால் கழுவுவதில்லை. ஒரே கையின் விரல்களின் விவகாரங்களில்கூட பேதம் இருக்கிறது. ஆட்காட்டி விரலைக் காட்டுவதற்கும், கட்டை விரலைக் காட்டுவதற்கும் உள்ள அர்த்தபேதத்தை எல்லோரும் அறிவர். இவ்விதமாக, உடலின் தனித்தனி அங்கங்களுடைய விவகாரங்களில் பேதம்

இருக்கிறது. ஆனால், அவற்றிடத்தில் நம்முடையது என்கின்ற ஆத்மிய பாவத்தில் வித்தியாசம் இல்லை. அதனால்தான் உடம்பில் எந்த அங்கமும் தொல்லைக்கு உட்படுகிறபோது அலட்சியம் செய்வதில்லை. துயரை நீக்குவதில் நமக்கு எல்லா உறுப்புகளும் சமமே. எல்லா அங்கங்களுடைய சுக–துக்கங்களில் நம்முடைய உணர்ச்சி ஒரே மாதிரியாக இருக்கிறது.

**ஆத்மௌபம்யேந ஸர்வத்ர**
**ஸமம் பஶ்யதி யோऽர்ஜுந ।**
**ஸுக$_2$ம் வா யதி$_3$ வா து$_3$:க$_2$ம்**
**ஸ யோகீ$_3$ பரமோ மத: ॥**

***(ஶ்ரீமத் பகவத்கீதை 6/32)***

‘‘அர்ஜுனா! எந்த (பக்தன்) தன்னைப் போலவே (உடலின் அடிப்படையில்) எல்லா இடங்களிலும் (என்னை) ஒரே சீராகப் பார்க்கிறானோ, மற்றும் சுகத்தையோ அல்லது துக்கத்தையோ (சீராகப் பார்க்கிறானோ), அவன் சிறந்த யோகியாக மதிக்கப்படுகிறான்.’’

இப்படி உயிரினங்களுக்குள்ளே உணவு, குணம், நடத்தை, வியாதி முதலியவற்றில் பேதம் இருக்கின்ற காரணத்தினால், அவர்களுடன் ஞானிகளான மகாபுருஷர்கள் நடந்து கொள்வதிலும் மாறுபாடு இருக்கும். அது இருக்கவும் வேண்டும். ஆனால், அவற்றுள் எல்லாம் உறையும் பொருள் ‘பரம்பொருள்’. அதனால், மகாபுருஷர்களின் பார்வையில் ஒரு பேதமும் ஏற்படுவதில்லை. அந்த உயிரினங்களை மகாபுருஷர்கள் ஆன்மிகக் கண்ணோட்டத்தில் பார்க்கிறார்கள். அன்பு, நலம் பேணுதல், தயவு முதலியன காட்டுவதில் ஒரு மாறுபாடும் இருப்பதில்லை. அவர்கள் உள்ளத்தில் ராக–த்வேஷம், தன்னுடையது என்கின்ற பற்று, ஆசை, கர்வம், பட்சபாதம், வித்தியாசம் போன்றவை கொஞ்சம்கூட இருப்பதில்லை. உடலிலுள்ள எந்த அங்கமாயிருந்தாலும் சரி, அதன் கஷ்டத்தை நீக்கும் முயற்சி தானாகவே

ஏற்படுகிறது. அதேபோல, எந்த உயிருக்குக் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது என்று தெரிந்தால், அதை நீக்கவும், அதற்கு சுகம் தரும் முயற்சியும் இயல்பாகவே, அவர்களுக்கு ஏற்பட்டுவிடுகிறது. இதனால்தான் பகவான் இங்கே மகாபுருஷர்களை 'சமநோக்குடையவர்கள்' என்றாரே தவிர, 'சம விவகாரம் செய்கின்றவர்கள்' என்று கூறவில்லை. கீதையில் மற்ற இடங்களிலும்கூட சமநோக்கு, சமபுத்தி என்றெல்லாம் வருகிறது—

**ஸமம் ஸர்வேஷு பூ$_4$தேஷு**
**திஷ்ட$_2$ந்தம் பரமேஶ்வரம் ।**
**விநஶ்யத்ஸ்வவிநஶ்யந்தம்**
**ய: பஶ்யதி ஸ பஶ்யதி ॥**

*(ஸ்ரீமத் பகவத்கீதை 13/27)*

**'ஸமம் பஶ்யந்ஹி ஸர்வத்ர'** *(கீதை 13/28)*
**'ஸர்வத்ர ஸமத$_3$ர்ஶந:'** *(கீதை 6/29)*
**'ஸமபு$_3$த்$_3$தி$_4$ர்விஶிஷ்யதே'** *(கீதை 6/9)*
**'ஸர்வத்ர ஸமபு$_3$த்$_3$த$_4$ய:'** *(கீதை 12/4)*

ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் கூறியிருக்கிறார்கள்—

**'பாவாத்வைதம் ஸதா குர்யாத்**
**க்ரியாத்வைதம் ந குத்ரசித்'**

**(தத்வோபதேசம்)**

''எண்ணத்தில் அல்லது மன அளவில் அத்வைதம் இருக்கவேண்டும். ஆனால், செயல் முறையில் எங்கும் இருக்கக் கூடாது.''

**(ஸ்ரீமத் பகவத்கீதை 5/18-ன் விரிவுரையிலிருந்து)**

## ॥ ஓம் தத் ஸத் ॥



॥ ஸ்ரீஹரி: ॥

## ஸ்ரீமத் பகவத்கீதை (தத்துவவிவேசனி)யில் கூறப்பட்டுள்ள சில கருத்துக்கள்

எந்த மனிதன் கர்மத்தில் அகர்மத்தைப் பார்க்கிறானோ, மேலும், எவன் அகர்மத்தில் கர்மத்தைப் பார்க்கிறானோ, அவன் மனிதர்களில் புத்திமான். மேலும், அந்த யோகி அனைத்துக் கர்மங்களையும் செய்கிறவன் ஆகிறான். [4/18]

சத்துவ குணத்தில் நிலைபெற்ற மனிதர்கள் சுவர்க்கம் முதலிய உயர்ந்த லோகங்களுக்குச் செல்கின்றனர். ரஜோ குணத்தில் நிலைபெற்ற மனிதர்கள் நடுவில் அதாவது மனித உலகிலேயே நிற்கின்றார்கள். தூக்கம், சோம்பல், வீண்செயலில் விருப்பம் முதலிய தாழ்ந்த குணங்களில் நிலைபெற்ற தாமஸ குணம் உடைய மனிதர்கள், புழு, விலங்கு, பறவை முதலிய தாழ்ந்த பிறவிகளையும் நரகத்தையும் அடைகிறார்கள். [14/18]

பிரகிருதியில் இருந்து கொண்டுதான் புருஷன் பிரகிருதியிலிருந்து உண்டான முக்குணங்கள் நிறைந்த பொருட்களை அனுபவிக்கிறான். மேலும், அந்த குணங்களுடைய தொடர்பே, அந்த ஜீவாத்மா நல்லதும் தீயதுமான பிறவிகளில் பிறப்பதற்குக் காரணமாகிறது. [13/21]

எந்தப் பரம்பொருளிலிருந்து சகலப் பிராணிகளும் உண்டாயினவோ, எந்த பரமாத்மாவினால் இந்த உலகம் முழுமையும் நிறைந்துள்ளதோ, அந்த பரமாத்மாவைத் தன்னுடைய இயல்பான கடமைகளினால் வழிபட்டு, மனிதன் பரம ஸித்தியை அடைகிறான். [18/46]

ஒவ்வொரு புலனுக்குரிய நுகர்ச்சிப் பொருளிலும் விருப்பு–வெறுப்புகள் மறைந்து இருக்கின்றன. மனிதன் அவ்விரண்டின் பிடியிலும் அகப்படக்கூடாது. ஏனெனில், அவ்விரண்டும்தான் இவனுடைய மேன்மைப் பாதையில் இடையூறு விளைவிக்கும் பெரும் எதிரிகள். [3/34]

உனக்கு இவ்வுலகில் செய்யத்தக்கது எது, செய்யத்தகாதது எது? என்று நிர்ணயிப்பதில் சாஸ்திரம்தான் சான்றாகும். இவ்வாறு தெரிந்து கொண்டு சாஸ்திர முறைகளில் கூறப்பட்டிருக்கும் கர்மங்களை ஆற்றக் கடவாய். [16/24]

॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## பாராயண நூல்கள்

| | Code No. | |
|---|---|---|
| 1. | 743 | ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] |
| 2. | 793 | ஸ்ரீமத் பகவத்கீதா – தமிழ் மூலம் & விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் – தமிழ் மூலம் |
| 3. | 795 | ஸ்ரீமத் பகவத்கீதா – பொழிப்புரை |
| 4. | 1918 | ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம்–பொழிப்புரை] [கையடக்கப் பிரதி] |
| 5. | 823 | ஸ்ரீமத் பகவத்கீதா – [மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] – பதவுரை–பொழிப்புரை] |
| 6. | 800 | ஸ்ரீமத் பகவத்கீதா–தத்வவிவேசனீ [மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] – பதவுரை–பொழிப்புரை–விளக்கவுரை] |
| 7. | 389 | கீதா மாதுர்யம் [ஸ்ரீமத் பகவத்கீதா – வினா-விடை] |
| 8. | 1426 | ஸ்ரீமத் பகவத்கீதா – ஸாதக ஸஞ்ஜீவநீ [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – விளக்கவுரை] [1 முதல் 9 அத்தியாயங்கள்] |
| 9. | 1427 | [10 முதல் 18 அத்தியாயங்கள்] |
| 10. | 600 | ஸ்ரீஹநுமாந் சாலீஸா – தமிழ் [மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 11. | 794 | விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் – தமிழ் மூலம் |
| 12. | 1256 | அத்யாத்ம ராமாயணம் – தமிழ் மொழிபெயர்ப்பு |
| 13. | 1606 | ஸ்ரீமந் நாராயணீயம் – தமிழ் மூலம்–விளக்கவுரை |
| 14. | 1904 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 15. | 1618 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – பொழிப்புரை |
| 16. | 1890 | கம்ப ராமாயணம் – சுந்தர காண்டம் [பாடல்கள்] |
| 17. | 1788 | ஸ்ரீ முருகன் துதிமாலை [தோத்திரத் தொகுப்பு] |
| 18. | 1789 | திருப்பாவை விளக்கம் |
| 19. | 1912 | விரத கல்ப த்ரயம் |

## ஸ்ரீமத் பாகவத மகாபுராணம்

[ தமிழ் மூலம் – பொழிப்புரை ]

20. 1843 பத்தாவது ஸ்கந்தம் – ஸ்ரீகிருஷ்ண லீலாம்ருதம்
21. 1605 பதினோராவது ஸ்கந்தம் – ஸ்ரீ உத்தவ கீதை
[மற்ற ஸ்கந்தங்கள் விரைவில்]

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

22. 1902 முதல் பாகம் [பால–அயோத்தியா காண்டம்]
23. 1903 இரண்டாவது பாகம் [ஆரண்ய–கிஷ்கிந்தா ]
24. 1904 மூன்றாவது பாகம் [சுந்தர காண்டம்]
25. 1905 நான்காவது பாகம் [யுத்த காண்டம்]
26. 1906 ஐந்தாவது பாகம் [உத்தர காண்டம்]

## அறிவுரை நல்கும் நூல்கள்

27. 127 பயனுள்ள கதைகள்
28. 365 பசுப் பராமரிப்பின் நற்பயன்கள் – கதைகள்
29. 423 கர்ம ரஹஸ்யம்
30. 466 சத்ஸங்கத்தின் சாரமான தத்துவங்கள்
31. 499 நாரத பக்தி ஸூத்ரம்
32. 536 கீதை கற்பதன் பயன்கள்
33. 550 திருநாம ஜபத்தின் மகிமை
34. 551 தூய்மையான உணவுப் பழக்கம்
35. 553 குடும்பத்தில் எப்படி இருக்க வேண்டும்?
36. 568 சரணாகதி
37. 569 உருவ வழிபாடு
38. 591 பிள்ளைகளின் கடமைகள்
39. 601 பகவான் ஸ்ரீகிருஷ்ணன்
40. 606 மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி
41. 607 எல்லோருக்கும் மேன்மை எப்படி ஏற்படும்?
42. 608 பக்தராஜ ஹனுமான்
43. 609 ஸாவித்ரி–ஸத்யவான் [கதைப் பகுதி]
44. 642 ஸ்ரீகிருஷ்ணனின் நண்பரான உத்தவரின் கதை
45. 643 பகவான் உறையும் ஐந்து இடங்கள்

|| Shri Hari ||

# Some of Our English Publications

| Code No. | |
|---|---|
| 452 } 453 } | **Shrimad Valmiki-Ramayana** [With Sanskrit Text and English Translation] Set of two volumes |
| 455 | **Shrimad Bhagavadgita** [Sanskrit Text and English Translation] Pocket Size |
| 456 | **Shri Ramacharitamanasa** [With Hindi Text and English Translation] |
| 457 | **Shrimad Bhagavadgita – Tattvavivechani** With Sanskrit text, Translation and Deatiled Commentary [By Jayadayal Goyandka] |
| 487 | **Gita Madhurya** |
| 534 | **Shrimad Bhagavadgita** [Sanskrit Text and English Translation] [Hard Bound Edition] Pocket Size |
| 564 } 565 } | **Shrimad Bhagavata Mahapuranam** [With Sanskrit Text and English Translation] Set of two volumes |
| 786 | **Shri Ramacharitamanasa** (Medium Size] |
| 824 | **Songs from Bhartrhari** |
| 1080 } 1081 } | **Shrimad Bhagavadgita – Sadhaka Sanjivani** [With Sanskrit text, Transliteration, Translation and Detailed Commentary] Set of two volumes [By Swami Ramsukhdas] |
| 1159 } 1160 } | **Shrimad Bhagavata Mahapuranam** [English Translation only] Set of two volumes |
| 1318 | **Shri Ramacharitamanasa** [With Hindi Text Transliteration, Roman Transliteration and English Translation] |
| 1406 | **Gita Madhurya** |
| 1411 | **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation] Book Size |
| 1528 | **Hanuman Chalisa** (Roman) (Pocket Size) |
| 1550 | **Shri Ramacharitamanasa – Sundara Kanda** (Roman) |
| 1584 | **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation] Pocket Size |
| 1617 | **Shri Ramacharitamanasa** [A Romanized Edition with English Translation] |
| 1638 | **Sri Hanuman Chalisa** |
| 1643 | **Ramaraksastotram** |
| 1658 | **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation] |



|| Shri Hari ||

# SOME OF OUR ENGLISH PUBLICATIONS

## By SHRI SWAMI RAMSUKHDAS

| Code No. | |
|---|---|
| 471 | **Benedictory Discourses** |
| 472 | **How to Lead A Household Life** |
| 473 | **Art of Living** |
| 474 | **Be Good** |
| 476 | **How to be Self-Reliant** |
| 497 | **Truthfulness of Life** |
| 498 | **In Search of Supreme Abode** |
| 552 | **Way to Attain the Supreme Bliss** |
| 562 | **Ancient Idealism for Modernday Living** |
| 570 | **Let us Know the Truth** |
| 619 | **Ease in God–Realization** |
| 621 | **Invaluable Advice** |
| 634 | **God is Everything** |
| 638 | **Sahaj Sadhana** |
| 669 | **The Divine Name** |
| 1406 | **Gita Madhurya** |
| 1407 | **The Drops of Nectar** |
| 1413 | **All is God** |
| 1438 | **Discovery of Truth and Immortaility** |
| 1470 | **For Salvation of Mankind** |

## SPECIAL EDITIONS

| | |
|---|---|
| 494 | **The Immanence of God** [By Shri Madan Mohan Malaviya] |
| 783 | **Abortion Right or Wrong? You Decide.** [By Shri Gopi Nath Agrawal] |
| 808 | **Nava Durga** [Story with the Picture] |
| 1414 | **The Story of Mira Bai** (Shri Bankery Behari) |
| 1491 | **Mohan** (Story with the Picture) |
| 1492 | **Rama Lala** (Story with the Picture) |